# ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு

## வரலாறும் போதனையும்

ஆங்கில மூலம்

S. No.

ஸ்ரீல பக்தி வினோத் தாகூர்

மொழி பெயர்த்தோன்

புலவர் பெ. சு. கணேசன் எம்.ஏ.,பி.எட்.,

வெளியிட்டோர் :

ஸ்ரீ கௌடியா மடம்

ஸ்ரீ கௌடியா மட சாலை, சென்னை-600 014.

# ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு

## வரலாறும் போதனையும்

ஆங்கில மூலம்:-
ஸ்ரீல பக்தி வினோத் தாகூர்

மொழி பெயர்த்தோன்:-
புலவர் பெ. சு. கணேசன் எம்.ஏ.,பி.எட்.,

வெளியிட்டோர்:-
ஸ்ரீ கௌடியா மடம்
ஸ்ரீ கௌடியாமட சாலை, சென்னை - 600 014.

வெளியிடுபவர்

**திருதண்டி ஸ்ரீ பக்தி பிரகூன் சாது**
ஸ்ரீ கௌடியா மடம்,
கௌடியாமட சாலை,
சென்னை - 600 014.

## ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவின் 5வது நூற்றாண்டு விழா வெளியீடு

முதற்பதிப்பு
ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி
**7-9-85**
பதிப்புரிமை பெற்றது

**விலை ரூ. 2.00**

அச்சிட்டோர் :
திருப்பதியான் பிரிண்டர்ஸ்,
சென்னை - 600 024.

புகழனைத்தும் குரு கௌரங்கருக்கே!

# "தாகூர் பக்தி விநோத்"

## [இந்நூலாசிரியரைப் பற்றிய சுவையான குறிப்புகள்]

'தாகூர் பக்தி விநோத்' என்ற இந் நூலாசிரியர் நாடியா மாவட்டத்தில் ஒரு காலத்தில் செழுமையாக விளங்கிய "உலா" என்ற கிராமத்தில் பிறந்தார். அவர் திறமையுள்ள, புகழ்பெற்ற வங்காள மாநில அரசு நிர்வாக அதிகாரியாகவும், பிரிட்டிஷ் அயர்லாந்து ஆகியவற்றினுடைய ஆசிய சங்கத்தின் கௌரவமான உறுப்பினராகவும் விளங்கினார்.

பக்தர்களுக்கு தாகூர் பக்தி விநோத் அவர்கள், உலகில் நிரந்தரமான ஸ்ரீ பகவானின் தொண்டராக—ஆண்டவனின் மகிழ்ச்சிக்காக—ஆண்டவனுக்குக் கீழ்ப்படிதலை நோக்கமாகக் கொண்டு—மனித வடிவு கொண்டு—உலவி வந்தார்.

### பக்தி வளரப் பாடுபட்டார்

நிலையாக இருக்கின்ற பக்தி வெள்ளத்தை மேலும் பல உள்ளங்களில் பரவும்படியும் தூய ஈடுபாடு என்னும் கால்வாய்களின் வழியாக உயர் நிலையில் பாய்ச்சுகின்ற அளவில் தாகூர் பக்தி விநோத் ஈடுபட்டார். நேர்மையானவை

குறைகின்ற நிலையில் இருப்பதை நீக்கி, மேலும் வளர்த்தும் தூய்மையானவை மேலும் வளர்க்கப்பட்ட நிலையில் தூய்மையான இறையுணர்வு உடையவர்களைப் பாதுகாத்தும், அவைகளைத் தெளிவாகத் தோன்றும்படியும் செய்தார். இறைவன்மீது கொண்டுள்ள தூய்மையான தீவிர பக்தியின் மூலமாக தனது ஆசாரியருடைய எண்ணங்களை அவர் பூர்த்திசெய்தார். உண்மையான, மிக உயர்ந்த பக்தியினைத் (தொண்டு, ஈடுபாடு) தன் வாழ்வில் மகிழ்ச்சியாக ஏற்றுக் கொண்டமையால், முழுமையான சேவையைச் செய்தார். அவற்றைத் தன் பேச்சிலும், எழுத்திலும் எடுத்தாண்டார். அவற்றைப் பின்வரும் பக்கங்களில் மிகச் சுருக்கமாகவும் ஒளிவிடக்கூடிய தன்மையிலும் காணலாம்.

## தாகூரின் அரிய சேவைகள்

1. ஸஜ்ஜன தோஷணி (மாத இதழ்).
2. ஜெய்வதர்மா (இயற்கையானதும் தானாகவே அமைந்ததுமான ஆத்மாவின் அல்லது ஜீவனின் மதம்).
3. ஸ்ரீ சைதன்ய சிக்ஷாம்ருதம் (ஸ்ரீ சைதன்ய தேவரின் இனிமையான படிப்பினை).
4. தத்வ—சூத்ரம்.
5. பாகவதர்க—மாரிசி மாலா.
6. பஜன ரஹஸ்யம்.
7. ஸ்ரீ கிருஷ்ண ஸம்ஹிதை.
8. பாகவத பிரசங்கங்கள்.
9. கௌதமரின் பிரசங்கங்கள்.
10. ஒரிஸாவின் மடங்கள்.
11. ஸ்ரீ சைதன்ய சரிதாம்ருதத்தின் விளக்கவுரை.
12. கல்யாண கல்பதரு, கீதாவலி, சரணாகதி.

முதலியவை அவர் நம்மீது கொண்டுள்ள அன்பிற்கு நினைவுச் சின்னமாகும்.

## ஸ்ரீ சைதன்ய மஹாப்ரபுவே தாகூரின் ஜீவன்

தாகூர், பரம்பொருளின் உண்மையான பணிவுள்ள சேவகன். அவருடைய வாழ்க்கையினையும் போதனையும் பற்றிய பின்வரும் சில பக்கங்கள் பேனாவின் கற்பனைக் கிறுக்கல்களோ, கூலிக்கு அமர்த்தப்பட்டு எழுதப்பட்ட எழுத்தாளனின் உற்பத்திக்கதையோ அல்ல. ஆனால், அவைகட்கு மாறாக நிலையான, அழியாத அன்போடு கூடிய பக்தியினால் எழுதப்பட்டவையாகும்.

அவருடைய செயல்களும் போதனைகளும் ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவிற்கு நினைவுச் சின்னங்களாகத் திகழ்பவை. ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு அவருடைய செல்வம்-ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு அவருடைய உடைமை (சொத்து) ஆவார். ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு அவருக்கு எல்லாமாக விளங்கினார்.

ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவின் போதனைகளைத் தன் வாழ்வில் முழுவதுமாகக் கடைப்பிடித்து, உலக வாழ்க்கையில் பற்றுதலற்ற, ஆனால் குரங்குப் பிடிபோன்று உண்மையான பக்திமீது ஆர்வமுள்ளவராக நடந்து, இவ்வுலக (இயல்புகள்)ம் உண்மையான பக்தியின்மீது எவ்விதத் தடையும் ஏற்படுத்த இயலாது என்பதனை அழகாகவும், அறிவுக் கூர்மையுடனும் உறுதிப்படுத்தினார்.

## பக்தனின் பண்புகளை விளக்கினார்

பக்தியாகிய மேகம் எப்பொழுதும் அவர்மீது கவிழ்ந்து (நிழல் போல் தொடர்ந்து) குருவின் ஆசியுடன் வாழ்கின்ற மாணவனாக, தன்னை முழுவதும் அர்ப்பணித்து அவருக்கு உண்மையானவனாக வாழ்ந்தார். (உண்மை ஆசான் எப்பொழுதும் பக்தியில் மூழ்கி, வேதத்தில் கூறியபடி வாழ்பவர்) ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவின் போதனைகள் யாவும், சிக்ஷாஷ்டகா என்ற பெயரில், பூரிக்ஷேத்திரத்தில் அவர் வாய்மொழியாகவே எட்டு பாக்களில் வடிவமைக்கப்பட்டுள்

ளது. தாகூர் தன் சொந்த வாழ்வில் சிக்ஷாஷ்டகாவில் கூறியவற்றை முழுவதுமாகக் கடைப்பிடித்தார். அவர் உடலால் இயந்திரம் போன்று வணங்கி வாழ்வது, உண்மை யான பக்தியினைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்கின்ற பக்தனுக்கு இயல்பானதல்ல என்று விளக்கிக் காட்டினார்.

உண்பதனை விலக்கிவைத்து வாழ்வதுகூட உண்மை யான பக்தியின் வளர்ச்சியல்ல என்றார். அவர், மகிழ்ச்சி யூட்டும் பொருள்களின்மீது பற்று—அவற்றினின்று விலகல் ஆகிய இரு துருவங்களையும் சாதுரியமாக விலக்கி விட் டார். அவர் உண்மையான பக்தியினை ஏற்றுக்கொள்ளுத லில் கடைப்பிடித்த உறுதி, கட்டுப்பாடு, நிலையான தன்மை ஆகியவை மிக அபூர்வமாக உலகில் மற்றையோரிடம் காணப்படுகின்ற ஒன்று.

குழந்தைகளோடு வாழ்கின்ற பெற்றோர்கள் பக்தி, துறவு மனப்பான்மை என்ற சொற்களைக் கேட்டளவிலே சுருங்கிக் கொள்கின்ற இயல்பினை அடைகின்றனர். அத்த கையோர் தாகூர்தம் வாழ்வினைக் கற்று, பிரம்மசரியம், சன்னியாசம் என்ற இரண்டும் இல்லற வாழ்விற்கு வேறு பாடானதல்ல என்பதை உணர்வர். உலகக் கடமைகளைச் செய்வது பக்தனது பிரம்மசரியத்திற்கோ அல்லது சந்நியாச தன்மைக்கோ ஒத்துவராதவையும் தடங்கலானதும் அல்ல என்று நிருபித்தார்.

## வாழ்க்கையின் உண்மையை வலியுறுத்தினார்

கி.பி. 1838 முதல் 1914 வரை இப்பூவுலகில் மனித வடிவோடு திகழ்ந்தார். இந்தச் சிறிய, கால இடை வெளியில், பிறப்பும் இறப்புமாகிய நிலையில் மனித இனத் திற்கு உரிய துன்பங்களை நீக்குதலில் தனது கவனத்தையும் முயற்சிகளையும் செலுத்தினார். ஆத்மாவின் பேரின்பத் திற்கு சாஸ்வதமான மறதியாக விளங்குவதனையும் அதன் காரணமாக உடல், மனம் ஆகியவை பக்தியினின்று வேறு

படுதலையும், அதன் விளைவாக போலி பக்தர்கள் துன்பத்திற்கு உள்ளாவதனையும் காட்டி, ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவின் பிறப்பு, சிறுவயது நிகழ்ச்சி முதலியவற்றினை உலக மக்களுக்கு தெளிவாக அறிவுறுத்தினார்.

## ஸ்ரீ சைதன்ய மஹாப்ரபுவின் அவதார ஸ்தலத்தைத் தெளிவு படுத்தினார்

கங்கையின் கிழக்குக் கரையில் உள்ள பழைய நவத்வீபத்தில் விளங்குகிற சிறிய கிராமமான மாயாபூர்தான் ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு பிறந்த புனித இடம் என்று நிலை நாட்டினார். இப்பொழுதுள்ள நாடியா அல்லது நவத்வீபம் (குலியா அல்லது கோலத்வீப் என்று அழைக்கப்படுவது) என்பது நவத்வீபத்தில் உள்ள ஒன்பது தீவுகளுள் ஒன்று. நவத்வீபத்தின் பழைய நகர்ப் பகுதி ஒரு காலத்தில் வளம் கொழித்த பகுதியாகவும், வடமொழி (சமஸ்கிருதம்) கற்றுத் தரும் புகழ் பெற்ற பெரிய நிலையமாகவும் விளங்கி வந்தது. இதைச் சுற்றிலும் 32 மைல்கள் ஹஸ்தீர்ணத்தில் ஒன்பது தீவுகளால் சூழப்பட்டு உள்ளன.

1. அந்தர்த்வீப் (ஸ்ரீ மாயாபூர்)
2. ஸ்ரீ மந்தாத்வீப் (சிமுலியா)
3. கத்ரும்த்வீப் (கடிகசா)
4. மத்யத்வீப் (மத்ய)
5. கோலத்வீப்(தற்பொழுதுள்ள நவத்வீபநகர்ப்பகுதி)
6. ருதுத்வீப் (சம்ப ஹதி முதளயவை)
7. ஜஹனுத்வீப் (ஜன்னகர்)
8. முதத்ருமத்வீப் (மமசுசி)
9. ருத்ரத்வீப் (சங்கர் புர் அல்லது ருத்ரபரா)

இந்த ஒன்பது தீவுகளிலும் ஒவ்வோராண்டும் பால்குண மாதப் பௌர்ணமிக்கு முன் ஒன்பது நாட்களும் (ஸ்ரீ சைன்தய தேவர் நாள்தோன்று முன்)இந்தியாவின் பல்வேறு

பகுதிகளிலிருந்தும் புனித யாத்திரையாக ஸ்ரீ சைதன்ய மடத்தின் தலைமையில் வந்து கூடுவர். முக்கியமான இடங்களைப் பார்வையிடுவர்.

## ஸ்ரீ சைதன்ய மஹாப்ரபுவை மீண்டும் மீண்டும் வணங்குகிறேன்

ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவின் அருளாசியும் கருணையும் தான் கடினமான உழைப்பினை மென்மையாக மாற்ற வல்லது என்பதனை உணர்ந்து பக்தர்களை அந்த நிலைக்கு ஆளாக்கிக் கொள்ள அழைக்கின்றேன்.

கற்பகத்தரு போன்று பயனுள்ளவற்றைத் தருகின்ற பயனுள்ள மரங்கள் போல் அற்புத சக்தி அளிக்கின்ற, கடல் போன்ற கருணையும் தூய்மையும் உடைய பக்தர்களை மறுபடியும் மறுபடியும் வணங்குகின்றேன்.

அவருடைய தாராள மனப்பான்மைக்குத் திரும்பவும் திரும்பவும் தலை வணங்குகின்றேன்—கண்ணனின் அன்புள்ளத்தினைத் தாராளமாக வழங்குபவர்—தானே கண்ணனின் அவதாரமாக விளங்குபவர் — கண்ணனின் பெயரையே கிருஷ்ண சைதன்யர் என்று தன் பெயராகக் கொண்டவர். உடல் தங்க நிறமாகக் கொண்டவர். மறுபடியும் மறுபடியும் அவரைத் தலையார வணங்குகின்றேன்.

புகழனைத்தும் குருவிற்கும் கௌரங்கருக்கும்

# ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு

## வரலாறும் போதனையும்

படித்தவர்க்கும் பாமரர்கட்கும், மதப்பற்றுடையவர்க்கும் ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவின் வாழ்க்கையினையும், போதனைகளையும் தமிழ் மட்டும் படித்தவர்கட்கு உதவக் கூடிய வகையில் இந்த நூல் எடுத்துக் கூறும்.

### ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு அவதரித்தார்

நாடியா என்னும் நகரத்தின் மாயாபூர் என்னும் இடத்தில் சக வருடம் 1407 பங்குனி மாதம் 23ம் தேதிக்குச் சமமான 1486 ஆண்டு பிப்ரவரி மாதம் 18ந் தேதி சூரிய அஸ்தமனமான சிறிது நேரத்தில் ஸ்ரீ சைதன்ய மஹா பிரபு அவதரித்தார். மஹாபிரபு பிறந்த பொழுது சந்திர கிரஹணமாக இருந்தது. வழக்கம்போல் கிரஹணத்தன்று நாடியா நகர மக்கள் ஹரிபோல் நாமத்தைக் கூறிக் கொண்டு பாகீரதி (கங்கை) ஆற்றில் குளித்துக் கொண்டும், மற்றும் பல வழக்கமான ஈடுபட்டுக் கொண்டும் இருந்தனர்.

அவரது தகப்பனரான ஜகன்னாத மிஸ்ரா வைதீக முறையில் வாழ்ந்து வந்த ஓர் ஏழைப் பிராமண குடும்பத்தினைச் சேர்ந்தவர். அவரது தாயார் சசிதேவியும் மிகச் சிறந்த நல்ல பெண்மணி. ஸில்லெட் என்ற பகுதியில் வாழ்ந்த பிராமண குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அவ்விருவரும்.

## பல் பெயர்களால் அழைக்கப்பட்டார்

மஹாபிரபு மிகவும் அழகான குழந்தையாயிருந்தமையால், நகரத்து மக்கள் (வெகுமதியுடன்) அன்பளிப்புடன், குழந்தையைக் காண வந்திருந்தனர். மஹாபிரபுவின் தாய் வழிப்பாட்டன் பண்டிட் நீலாம்பர் சக்கிரவர்த்தி ஒரு புகழ் பெற்ற ஜோதிடர். அவர், பிற்காலத்தில் மஹாபிரபு ஒரு பெரிய மரியாதைக்குரிய பெரியோனுக விளங்குவார் என்று ஜோதிடம் கூறினுர். அதனுல் அவர் மஹாபிரபுவிற்கு 'விஷ்வம்பர்' என்று பெயரிட்டார். அவரின் தங்கமயமான உடல் வண்ணத்தைக் கண்டு அருகிலுள்ள பெண்கள் 'கௌர் ஹரி' என அழைத்தனர். அவருடைய தாயார் மஹாபிரபு வேப்ப மரத்தினடியில் பிறந்தமையால் 'நிமாய்' என அழைத்தார். மிகவும் அழகாக இருந்தமையால் அவரை எல்லோரும் உள்ளன்போடு நேசித்து தினந்தோறும் பார்க்க வந்தனர்.

வயது ஏற ஏற மனம் போன போக்கில் செல்வராகவும் உல்லாசப் பிரியராகவும் விளங்கினுர். 5 வயதிற்குப் பிறகு அங்குள்ள பாடசாலே ஒன்றில் சேர்க்கப்பட்டார். மிகக் குறுகிய காலத்தில் வங்காள மொழியைக் கற்றுக் கொண்டார்.

## வரலாற்றில் இடம் பெற்ருர்

அவர் காலத்தில் வாழ்ந்த வரலாற்றுப் பேராசிரியர்கள் மஹாபிரபுவின் இளமைக் காலத்தில் நடந்த வியத்தகு விந்தைகளே தாங்கள் ஏடுகளில் குறிப்பிட்டுள்ளனர். அதில் மஹாபிரபு சிறு குழந்தையாய் இருந்த காலத்தில் தாயின் கையில் இருந்த சமயத்தில் ஒரு நாள், விடாமல் அழுது கொண்டே இருந்தார். அது சமயம் மஹாபிரபுவின் தாயாரும் ஏனைய பெண்களும் 'ஹரிபோல்' நாமத்தைக் கூறினர். உடனே மஹாபிரபு அழுகையை நிறுத்தி

விட்டார். அதிலிருந்து அந்த வீட்டில் 'ஹரிபோல்' உச்சரிப்பு தொடர்ந்து நிகழ்வதொன்ருக இருந்து வந்தது.

வேருெருசமயம் அவரது தாயார் இனிப்புப்பொருளைத் தந்தபொழுது, அவர் அதை விட்டு விட்டு களிமண்ணை உண்டார். அவரது தாயார், அதற்கு என்ன காரணம் என்று கேட்டார். அதற்கு அவர், ''எல்லா இனிப்புப் பொருளும் களிமண்ணின் மற்றைய வடிவமே'' என்றார். அதனுல், அவர் ''களிமண்ணைச் சாப்பிடுவதில் கடினம் இல்லை; எளிமையானதே'' என்ருர்.

மிகப்பெரிய பண்டிதரின் இணைக்கமான மனைவியாக விளங்கிய தாயார், ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு காரியத்திற்காக விசேஷமாக தோற்றுவிக்கப்பட்டது. கூஜா வடிவத்தில் உள்ள களிமண் நீர் வைக்கும் பாத்திரமாகப் பயன்படும். ஆனுல் அதே சமயத்தில் செங்கல் வடிவத்தில் உள்ள களிமண் அத்தகைய நீர் வைக்கும் பாத்திரமாகப் ப்யன்படாது என்பதை உணர்த்தினுர். மஹாபிரபுவிற்குத் தாயார் கூறிய சமாதானம் பொருத்தமாயிற்று. களிமண் உண்ணும் தன் அறியாமையை ஒப்புக்கொண்டு இனிமேல் எதிர்காலத்தில் அவ்வாறு செய்ய மாட்டேன் என ஒப்புக்கொண்டார்.

## கிருஷ்ணனுகக் காட்சியளித்தார்

ஒரு சமயம் புனித யாத்திரையாக வந்த பிராமணர் ஒருவர் அதிதியாக அவர் வீட்டில் தங்கினுர். அப்பொழுது தனக்கு வேண்டிய உணவை தானே தயார் செய்து கொண்ட பின்னர் கண்ணனை மனதில் தியானம் செய்து கொண்டிருந்தார். இந்தச் சமயம் பார்த்து அங்கு வந்த அச்சிறுவன் அந்த சமைக்கப்பட்ட உணவை உண்டார். சிறுவனின் அந்தச் செயலைக் கண்டு ஆச்சரியப்பட்ட அந்தணன், ஸ்ரீ ஜகந்நாத மிஸ்ராவின் வேண்டுகோளுக்கு இணங்க மறுபடியும் சமைத்துக் கொண்டார். கண்ணனை மனதில் தியானம்

செய்து கொண்டே உணவை நிவேதனம் செய்யும் சமையத்தில் மறுபடியும் அச்சிறுவன் அவ்வுணவை உட்கொண்டு விட்டார். மூன்றாவது தடவையாக அந்த அதிதி கட்டாயத்தினால் உணவைச் சமைக்கும் நிலை ஏற்பட்டு விட்டது. இப்பொழுது வீட்டில் உள்ள அனைவரும் அச்சிறுவனைத் தவிர உறங்கி விட்டனர். வந்த விருந்தாளிக்கு சிறுவன் ''கிருஷ்ணனாக'' க் காட்சி அளித்தார். வந்த அதிதியை ஆசிர்வதித்தார். அதிதி கண்ணனைப் பார்த்த பரவசத்தால் தன் நிலை இழந்து விட்டார்.

## ஐந்து வயதிற்குள் அதிசயங்கள்

ஒருசமயம் இரண்டு திருடர்கள் மஹாபிரபுவை அவருடைய தந்தையார் இல்லந்திலிருந்து அவர் அணிந்திருந்த நகைகளைத் திருடுவதற்காக வேண்டி தூக்கிச்சென்று இனிப்புப் பொருள்களைத் தந்தனர். சிறுவன் நிலையில் இருந்த மஹாபிரபு திருடர்களிடம் தன் மாய சக்தியினால் பொய்த் தோற்றத்தினை காட்டி ஏமாற்றிவிட்டு மறுபடியும் தன் வீட்டிற்கு திரும்பி விட்டார். திருடர்கள், அச்சத்தினால் மறுபடியும் சிறுவனை தேடாமலே அந்த இடத்தை விட்டு ஓடிவிட்டார்கள்.

மஹாபிரபுவின் வாழ்க்கையில் வேறு ஒரு அதிசயம் நடந்தது. ஹிரண்யாவும் ஜகதீசனும் சேர்த்து வைத்திருந்த பொருளை, ஏகாதசி நாளன்று கண்ணனை வணங்குவதற்காகக் கேட்டு,பெற்றுக்கொண்டார்.அவர் நான்கு வயது சிறுவனாக இருந்தபோது, அவரது தாயாரால் புனித மற்றது என்று தள்ளப்பட்ட பானைக் குவியலின் மீது அமர்ந்து இருந்தார். அவர் தன் தாயாரிடம், விஷ்ணுவிற்குப் படைக்கப்பட்ட பொருள்களில் புனிதமானது, புனித மற்றது என எதுவும் கிடையாது என்று விளக்கினார். மேலே கூறப்பட்ட சம்பவங்கள் அவரது ஐந்து வயதிற்குள்ளானவைகள்.

## கல்வியும் திருமணமும்

எட்டாவது வயதில் மாயாபூர் கிராமத்திற்கு அருகில் உள்ள கங்காநகர் கிராமத்தில் உள்ளகங்காதாஸ்பண்டிதரின் பள்ளியில் சேர்க்கப்பட்டார். இரண்டு ஆண்டுகளுக்குள் மஹாபிரபு சமஸ்கிருத இலக்கணத்திலும் அணியிலும் சிறந்தவராக விளங்கினார். அதற்குப்பிறகு, பண்டிதரான தன்னுடைய தந்தையாருக்குச் சொந்தமான புத்தகங்களைப் படித்து சிறந்த அறிவாளியாகத் திகழ்ந்தார். ஸ்மிருதியைத் தன் சொந்த முயற்சியாலேயே படித்திருக்க வேண்டும். பண்டித ரகுநாதசிரோமணியிடம் கற்றுவந்த மாணவர்களுடன் போட்டிபோட்டுக் கொண்டு 'நியாய'ப் பாடத்தினை நன்கு கற்றார்.

பத்தாவது வயதிற்குப் பிறகு மஹாபிரபு இலக்கணம், அணி, ஸ்மிருதி, நியாயம் முதலியவற்றில் நல்ல அறிவாளியாகத் திகழ்ந்தார். அந்த சமயம் அவருடைய அண்ணனை விஸ்வரூபர் வீட்டை விட்டுவிட்டு துறவு மனப்பான்மை கொண்டு சந்நியாஸ ஆஸ்ரமத்தை மேற்கொண்டார். ஸ்ரீ சைதன்யர் மிகச் சிறிய வயதினராயிருந்த போதிலும், அண்ணா விஸ்வரூபர் துறவு பூண்டபொழுது வருந்திய தாய் தந்தையர்க்கு ஆறுதல் கூறி தாம் அவர்களுக்கு சிறந்த ஸேவை செய்வதாகக் கூறி அதுவே கடவுளை திருப்திப்படுத்தும் என்று கூறினார்.

பின்னர் அவருடைய தந்தையார் இறைவனடி சேர்ந்தார். மறுபடியும் அவரது தாயார் மிகுந்த வருத்தத்தில் ஆழ்ந்து விடவே, மஹாபிரபு தன்னுடைய அமைதியான அன்புடைய முகத்தினால் தாய்க்கு ஆறுதல் அளித்தார். நாடியா கிராமத்தில் வசித்த வல்லபா ஆசார்யாவின் மகளான லக்ஷ்மி தேவி என்பவரை 14 அல்லது 15 வயதில் மணந்தார். நியாயம், தத்துவம், சமஸ்கிருதம் ஆகியவற்றில் புகழ்பெற்ற இடமாக விளங்கிய நாடியாவில் மஹாபிரபு

அந்த சிறுவயதிலேயே அத்துறைகளில் மிகச் சிறந்த அறிவாளியாக மதிக்கப் பெற்றார். ஸ்மார்த்தர்கள் மட்டு மல்லாது நியாய பண்டிதர்கள்கூட மஹாபிரபுவினிடம் இலக்கிய சர்ச்சையில் ஈடுபட மிகவும் அச்சம் கொண்டனர்.

திருமணமானவராதலால் கிழக்கு வங்காளத்தில் உள்ள பத்மா நதிக்கரைக்கு பொருளீட்டச் சென்றார். அங்கு தன் அறிவுக் கூர்மையினைக் காட்டி போதுமான அளவு செல்வத்தினைச் சேர்த்தார்.

இந்த கால கட்டத்தில் தான் இடையிடையே வைண வத்தினைப் பிரசாரம் செய்தார். தபன்மிஸ்ராவிற்கு வைன வத்தினைப் பற்றிப் போதனை செய்த பின்னர், மஹாபிரபு தபன் மிஸ்ராவை காசிக்குச் சென்று தங்கும்படியும், அங்கு வாழும்படியும் கட்டளையிட்டார்.

கிழக்கு வங்காளத்தில் மஹாபிரபு வாழ்ந்த காலத்தில் அன்னாரின் இல்லத்தரசி லக்ஷ்மிதேவி பாம்பு கடித்ததால் மரணமுற்று இறைவனடி சேர்ந்தார். வீட்டிற்கு வந்து பார்த்த பொழுது மஹாபிரபுவின் தாயார் துக்கநிலையில் இருப்பதை உணர்ந்தார். மனித முயற்சிகளின் நிலையில் லாத் தன்மையினைத்தான் தாயாருக்கு பல உதாரணங்களு டன் உணர்த்தி துன்பத்தினை மறக்குமாறு செய்தார். தாயா ரின் வேண்டுகோளின்படி மஹாபிரபு மறுபடியும் விஷ்ணு பிரியா என்பவரை மறுமணம் செய்து கொண்டார்.

## கேசவ மிஸ்ரரை வாதத்தில் வென்றார்

அவருடைய நண்பர்கள் அவர் திரும்பி வந்தவுடன் மஹாபிரபுவுடன் சேர்ந்து கொண்டனர். இந்த காலகட்டத் தில் மஹாபிரபு மிகவும் கீர்த்திபெற்று நாடியா நகரத்தி லேயே மிகச் சிறந்த பண்டிதராகக் கருதப்பெற்றார். நாடு முழுவதும் சுற்றி தன்னை மிகப்பெரிய அறிவாளி என்று சொல்லிக்கொண்ட, காஷ்மீர நாட்டைச் சார்ந்த கேசவ மிஸ்ரா என்பவர் நாடியா நகர பண்டிதர்களுடன் வாதம் புரிவதற்காக வந்தார். வெற்றி பெற்றே வந்த கேசவ

மிஸ்ராவுடன் வாதம் புரிய அஞ்சியவர் நாடியாவை விட்டு சென்று விட்டனர். கேசவ மிஸ்ரர் மஹாபிரபுவை மாயாபூரி லுள்ள ''பரோ கோனேகாட்'' என்னுமிடத்தில் சந்தித்தார். மிகக் குறுகிய விவாதத்திலேயே கேசவ மிஸ்ரர் தனது தோல்வியை ஒப்புக்கொண்டு, அந்த இடத்தைவிட்டுப் புறப் பட்டார். நிமாய் பண்டிட் (மஹா பிரபு) அவரது காலத்தில் சிறந்து விளங்கியவர்களுள் மிகச் சிறந்தவராகக் கருதப் பட்டார்.

## அனைவரும் வியந்தனர்

16 அல்லது 17வது வயதில் மஹாபிரபு பல மாணவர் களுடன் கயாவிற்குப் பயணம் செய்தார். மாதவேந்திர பூரி என்ற வைணவ சந்நியாசியின் மாணவனான ஈசுவர பூரி யிடமிருந்து ஆத்மதத்வ உபதேசத்தைப் பெற்றார். நாடி யாவிற்குத் திரும்பிய பின்னர் நிமாய் பண்டிட் ஒரு மதப் பிர சாரகராக மாறினார். ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவிற்கு முன் தோன்றிய, வைணவத்தை ஏற்கனவே தழுவிய அத்வைத பிரபு, ஸ்ரீ வாசு போன்றோர் மிகச் சிறியவராக உள்ள மஹா பிரபுவிடம் ஏற்பட்ட மதம் பற்றிய சிந்தனை மாற்றத்தைக் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டனர்.

அவர் வாதம்புரியும் நையாயிகாகவோ, சச்சரவு செய் கிற ஸ்மார்த்தராகவோ, அணிகளை விளக்கம் செய்கிற ஆலங்காரிகள்களே இல்லை; முற்றிலும் மாறியவராகவே காணப்பட்டார். கிருஷ்ண நாமத்தின் பெயரைக் கேட்டாலே மயக்கமடைந்து விடுகிறார். உணர்ச்சி வசப்பட்டவராகவே ஆகிவிடுகிறார். நன்கு படித்த அறிவாளிகளான தன் சீடர் கள் காண ஒரு சமயம் ஸ்ரீவாச பண்டிதரின் வீட்டுமுன் மஹாபிரபு தனது தெய்வீக சக்தியினைக் காட்டியதனை முராரி குப்தா என்ற பெரியோர் தன் கண்களால் கண்டதா கக் கூறப்படுகிறது.

## வைணவப் பிரசாரத்தால் விழிப்புணர்ச்சி

இந்த கால கட்டத்தில் தான் ஸ்ரீவாச பண்டிதரின் வீட்டு எல்லேக்குள் கீர்த்தனைகள் சொல்லித் தருவதற்காக இரவுப் பள்ளி ஒன்றினை ஆரம்பித்தார். அங்கு அவர் உபதேசம் செய்தார்; பாடினர்; நடனம் ஆடினர்; அங்கு அவர் மத சம்பந்தமான தனது உணர்வுகளை எல்லாம் நன்கு வெளிப்படுத்தினர். இந்தியா முழுவதும் சுற்றி விட்டு, வைணவத்தை ஆங்காங்கு பரப்பிய நித்யானந்த பிரபு அப்பொழுது அவருடன் சேர்ந்தார். உண்மையான இதய சுத்தியோடு வைணவத்தைப் பாரததேசம் முழுவதும் பரப்பிய வைணவ அறிஞர்கள் பலர் வங்காளத்தின் பல பாகங்களிலிருந்தும் ஒன்று சேர்ந்தனர்.

இப்பொழுது நாடியா நகரம் வைணவர்களின் புனித தலமாக விளங்கியது. வைணவ சமயத்தினை மனித சமுதாயம் முழுவதும் பரப்பி, தெய்வ நிலேக்கு உயர்த்தும் என்னமுடையோர் கூட்டமாக விளங்கியது.

மஹாபிரபு நித்யானந்தருக்கும் ஹரிதாஸுக்கும் அளித்த முதல் கட்டளை இஃது:- 'நண்பர்களே நகரத்தின் தெருக்களுக்கு எல்லாம் செல்லுங்கள் ஒவ்வொருவரையும் அவரது இல்லத்தில் சந்தியுங்கள். புனித வாழ்க்கைக்காக ஹரி நாமத்தைப் பாடச் செய்யுங்கள். பிறகு என்னிடம் வந்து, உங்கள் பிரசாரங்களின் பயனை} என்னிடம் கூறுங்கள். இதைக் கேட்ட அகன்ற அவ்விரு உபதேசம் செய்பவர்கள் ஜகய், மத்தாய் என்ற இரு பெரும் தீயவர்களைச் சந்தித்தனர். அவ்விருவரும் மஹாபிரபுவின் கட்டளையைத் தூஷணை செய்தனர். ஆனல், அவ்விருவரும் விரைவில் மஹாபிரபுவின் பக்தி மயமான செல்வாக்கினல் மாறிவிட்டார்கள். நாடியா நகர மக்கள் ஆச்சரியப்பட்டனர். நாடியா நகர மக்கள் நிமாய் பண்டிதர் மிகப்பெரிய ஞானி மட்டுமல்லர்; தெய்வத்தினல் அனுப்பப்பட்ட தூதுவரே ஆவர். இவை கடந்ததும் அன்னருக்கு 23 வது வயது முடிவுக்

குள்ளே மஹாபிரபு நாடியா நகரம் மட்டுமல்லாது பாரத தேசத்தின் முக்கியமான நகரங்கள் சுற்றியுள்ள கிராமங்கள் எல்லாவற்றிலும் வைணவத்தைப் பிரசாரம் செய்தார்.

இவரைப் பின்பற்றுபவர்கள் வீட்டில் பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டினூர். பக்தியின் இரகசியத்தை பின்பற்று பவர்களுக்குக் கற்பித்தார். மற்றைய பக்தர்களுடன் சங்கீர்த் தனங்களைப் பாடினார். தெருவிலும், கடை வீதிகளிலும் புனிதமான ஹரி நாமத்தினை மஹா பிரபுவின் தொண்டர் கள் பாட ஆரம்பித்து விட்டார்கள். இஃது ஒரு புதிய விழிப் புணர்ச்சியை உண்டாக்கியும் பல்வேறு பகுதிகளிலும் பல் வேறு உணர்வுகளைத் தூண்டி விட்டன. பக்தர்கள் மிகவும் மனம் மகிழ்ந்தனர்.

## மஹாபிரபுவின் தெய்வீக சக்தி

ஸ்மார்த்த பிராமணர்கள் நிமாய் பண்டிதரின் வெற்றி யைக் கண்டு பொருமை கொண்டனர்; சாந்த் காஸிடம் ஸ்ரீ சைதன்யரின் நடவடிக்கை பற்றியும் ஹிந்து அல்லா தவர் என்றும் புகார் செய்தனர். காஸி ஸ்ரீவாச பண்டிதரின் வீட்டிற்கு வந்து மிருதங்கம் (கோலே) ஒன்றை உடைத் தான். நிமாய் பண்டிதர் தன்னுடைய விநோதமான மத சப் தத்தை (பிரசாரத்தை) நிறுத்தாவிட்டால் அவரும் அவ ருடைய சீடர்களும் இஸ்லாமைத் தழுவ வேண்டிவரும் என்று சாஜி அறிவித்தான். இதனை மஹா பிரபுவின் கவனத் திற்குக் கொண்டு வந்தனர். அவர் நகர் மக்கள் ஒவ்வொரு வரையும் அன்று சாயங்காலம் கையில் ஒரு விளக்குடன் வரு மாறு கட்டளையிட்டார். அப்படியே அவர்கள் நடந்தனர். நிமாய் சங்கீர்த்தனத்துடன் பாடிக் கொண்டே 14 பிரிவுக ளாகக் காஸியின் வீட்டுமுன் சென்றனர்.

மஹாபிரபு காஸியுடன் நீண்ட விவாதம் நடத்தியதின் பயனாகவும் காஸியின் இதயத்தை தொட்டதன் பலனாகவும் இறுதியில்காஸி சமாதானமடைந்து இதய பூர்வமாக மஹா

பிரபுவைஒப்புக் கொண்டார்,மனம் திறந்து அழுதார்.சிறந்த ஆன்மானுபவத்தைப் பெற்ருர். அவை அவரது சந்தேகங்களைப் போக்கின. அவரையே மதஉணர்வுடையவராக மாற்றியது.அவ்வுணர்வு மேலும் மேலும் பரவசப்படுத்தியது. பிறகு காஸி மஹாபிரபுவின் சங்கீர்த்தனக் குழுவில் சேர்ந்து கொண்டார். உலகமே மஹாபிரபுவின் தெய்வீக சக்தியைக் கண்டு அதிசயமும் ஆச்சரியமும் கொண்டது. இச் சம்பவத்திற்குப் பிறகு நூற்றுக் கணக்கானவர்கள் மஹாபிரவுவின் சமயத்துக்கு மாறினர். மஹாபிரபுவின் சமயத்திற்கு மாறி விஸ்வம்பர் தலைமையின் கீழ் பணியாற்ற ஆரம்பித்தனர்.

## சன்யாசத்தை மேற்கொண்டார்

இதற்குப் பிறகு குலியாவிலுள்ள பொருமையும், கீழ்த் தரமான எண்ணங்களையுடைய சில பிராமணர்கள் மஹாபிரபுவோடு பிணக்குகளை ஏற்படுத்திக் கொண்டு மஹாபிரபுவை எதிர்க்க ஒரு கூட்டத்தினை (படை)யே சேர்த்து விட்டனர். மஹாபிரபு தன்னுடைய கொள்கைகளில் மிகத் தீவிரமான பற்றுடையவர் ஆனலும் இயற்கையில் மிக மென்மையான இதயம் படைத்தவர். கட்சியுணர்வும், மத வெறியுணர்வும் முன்னேற்றத்தின் எதிரிகள் என்று கருதுபவர்.

அவர் நாடியாவில் உள்ளவரை, ஒரு குடும்பத்தின் உறுப்பினர் என்ற நிலையில் உள்ள வரை அவருடைய குறிக்கோள்கள் முழுவதும் வெற்றி அடைய முடியாது எனவும் உறுதியாக எண்ணிஞர். உடனே மஹாபிரபு தான் ஒரு உலகக்குடி மகஞக இருக்கவேண்டுமெனக் கருதியும் மிகக் குறுகிய குடும்ப வட்டத்தில் இருப்பது கூடாதெனக் கருதியும், தனது 24வது வயதில் கடாவா என்ற இடத்தில் வாழ்ந்த கேசவ பாரதி என்ற [ஆசாரியடமிருந்து சன்யாசத்தை மேற்கொண்டார்.

மஹாபிரபுவின் பிரிவிற்காக அவரது தாயாரும்,அவரது மனைவியும் மிகவும் வேதனைப்பட்டு அழுதார்கள். ஆனல்,

நமது சான்ருேராகிய மஹாபிரபு கொள்கையில் உறுதிப்பாடு உடையவராதலால், மென்மையான இதயம் கொண்டவராயிருந்தும் கலங்காது இருந்தார். அவர் குடும்பமாகிய சிறு உலகத்தினை விட்டு விட்டு, எல்லையில்லாத தெய்வீக உலகமான தன் கண்ணனது உலகத்திற்குப் புறப்பட்டுவிட்டார்.

## தாயிடம் ஆசி பெற்ருர்

துறவிற்குப் பிறகு சாந்திபூரில் உள்ள அத்வைத பிரபுவின் வீட்டிற்குப் போக விரும்பினுர். அத்வைத பிரபு ஒருவாறு மஹாபிரபுவையும், அவரது தொண்டர்களையும் வரவேற்று உபசரிப்பதினைச் சமாளித்தார். சசிதேவியையும் அவர் தம் மகனைக் (மஹாபிரபுவைக்) காண்பதற்கு வரவேற்று இருந்தார். தன் மகனைச் சந்நியாச உடையில் காண்கின்ற நிலையில் உள்ள சசிதேவியின் மனத்தை மகிழ்ச்சியும் துக்கமும் ஆக்ரமித்துக்கொண்டிருந்தது. சந்நியாச உடையில் இருந்தமையால் அவர் கௌபீனமும், மேலே போர்வை போன்ற ஆடை ஒன்றையுமே அணிந்திருந்தார். அவரது தலை வழிக்கப்பட்டு இருந்தது. அவரது கை தண்டத்தையும் (துறவிகளின் கோல்), கமண்டலத்தையும் (நீர் குடிக்கும் பாத்திரம்) மட்டுமே வைத்திருந்தது. புனித மகன் அன்பு மிகுந்த தாயின் பாதங்களில் விழுந்து வணங்கினார்.

''தாயே!'' இவ்வுடல் நீ அளித்தது. அதனுல் நான் உன்னை வணங்க வேண்டும்' என மஹா பிரபு சொன்னுர். 'நான் தெய்வீக சம்பந்தமான இன்பங்களைப் பெற பிருந்தாவனம் செல்ல எனக்கு அனுமதி கொடு' என்றும் வேண்டினுர். தாய், அத்வைத பிரபு மற்றும் பல சான்ருேர்களிடம் கலந்து பேசிய பின்னர், சைதன்யமஹாபிரபுவை பூமியில் தங்க வேண்டும் என்றும், அதனுல்தான் அவரைப்

பற்றிய செய்திகளை அறியமுடியும் என்றும் மஹாபிரபு விடம் கூறினர். மஹாபிரபு அதனை ஏற்றுக்கொண்டார்.

## யாத்திரை மேற்கொண்டார்

சில நாட்களுக்குப் பிறகு ஒரிஸா செல்ல சாந்திபூரி லிருந்து புறப்பட்டார். மஹா பிரபுவின் சரித்திரத்தை எழுதுபவர்கள், சாந்திபூரிலிருந்து பூரி சென்ற (வரலாற்றுச் சிறப்புமிக்க பிரயாணம்) ஸ்ரீ கிருஷ்ணசைதன்யரின் (சந்நி யாசத்திற்குப் பிறகு மேற்கொண்ட பெயர்) பிரயாணத்தை மிக விரிவாக எழுதியுள்ளார்கள். 24 பர்கானுவில், தற் பொழுது தானு மதூர்பூர் என்று கூறப்படுகின்ற இடத்தில் அமைந்துள்ள சத்தாராபோக் என்ற இடம் வரை பாகீரதி நதியின் கரையினையொட்டியே பிரயாணம் செய்தார். அங்கு ஒரு படகில் ஏறி, மித்னுபூர் மாவட்டத்தில் உள்ள பிரயாக் காட் என்னும் இடம் வரை சென்றார்.

பிறகு பலாசூர், கட்டாக் வழியே சென்று பூரியை (ஒரிஸ்ஸா) அடைந்தார், வழியிலேயே புவனேஸ்வர் ஆல யத்தைக் கண்டார். பூரியை அடைந்தவர் ஆலயத்தில் ஜகந் நாதரைக் கண்டார். சர்வ பௌமரை அவருடைய வேண்டு கோளின் பேரில் சந்தித்தார்.

## இனிய எளிய பிரம்ம சூத்திர விளக்கம்

அந்தக் காலத்தில் சர்வ பௌமர் பெரிய (அறிவாளி) பண்டிதராக விளங்கினர். அக்காலத்தில் சிறந்து விளங்கிய நையாயிகரும் கூட. அவருடைய ஞானம் எல்லையில் லாதது. சங்கரரது வேதாந்த தத்துவப் பள்ளியில் மிகக்கற்ற ஞானியாக விளங்கியவர் சர்வ பௌமர். நாடிசா (வித்யா நகர்) வில் பிறந்து வளர்ந்தவர். தனது பள்ளியில் பல மாண வர்கட்கு நியாய தத்துவங்களைக் கற்றுக் கொடுத்தார். நிமாய் பிறப்பதற்குச் சில நாட்களுக்கு முன் சர்வ பௌமர் பூரியை விட்டுப் புறப்பட்டார். அவருடைய மைத்துனரான

கோபிநாத் ஆசாரியா, புதிய சந்நியாசியான ஸ்ரீ கிருஷ்ண சைதன்யரை சர்வபௌமருக்கு அறிமுகம் செய்து வைத்தார். சர்வபௌமர், மஹாபிரபுவின் இளமையான தோற்றத்தையும் அழகையும் கண்டு, இத்தகைய தோற்றமுடையோரால் மிக நீண்ட காலம் ஆயுள் உடைய தன்மையால் சந்நியாச தர்மத்தைக் கடைப் பிடிக்க முடியுமா என்று ஆச்சரியமும் பட்டார். அச்சமும் கொண்டார்.

நாடியாவிலிருந்தே சைதன்ய மகாபிரபுவை அறிந்த கோபிநாத் மஹாபிரபுவிடம் மிக்க மரியாதை வைத்திருந்தார். மேலும் சந்நியாச நிலையுடையோர் மிகச் சாதாரண மனித இனத்தைச் சார்ந்தவரல்லர் என்றும் கூறினர். இதைப்பற்றிய கருத்தில் சர்வ பௌமருக்கும் கோபிநாதருக்கும் மிகக் கடுமையான வாக்குவாதம் நடைபெற்றது. பிறகு மஹாபிரபுவை சர்வபௌமர் தான் இயற்றிய வேதாந்த சூத்திரத்தின் பாடல்களை கேட்குமாறு வேண்டிக்கொண்டார். மஹாபிரபுவும் மௌனமாக இருந்து அதைக் கேட்டார். புகழ்வாய்ந்த சர்வபௌமர் ஆழ்ந்த சிந்தனையோடு கூறிய கருத்துக்களை 7 நாட்கள் மௌனமாகக் கேட்டார். சர்வபௌமர் மஹாபிரபுவை நோக்கி, "கிருஷ்ண சைதன்யா! நான் கூறிய கருத்துக்களையும், விளக்கங்களையும் 7 நாட்கள் கேட்ட பிறகும் ஒன்றும் கூருததிலிருந்து நீ வேதாந்தத்தைப் பற்றி ஒன்றும் அறியமாட்டாய் எனத் தெரிகிறது" என்ருர். அதற்கு அவர், சூத்ரங்களை நான் நன்ருக அறிவேன். ஆனல், சங்கராசாரியார் தன் விளக்கங்களால் எதனை அறிவிக்கிருர் என்பதனை அறிந்து கொள்ள முடியவில்லை. ஆச்சரியமடைந்த சர்வபௌமர், "நீ எப்படி சூத்திரங்களை மட்டும் புரிந்து கொண்டு, சூத்திரங்களை விளக்குகின்ற விளக்கங்கள் புரியவில்லை என்கிறாய்? சரி. சூத்திரங்களைப் புரிந்து கொண்டாய் என்றால் அதற்குரிய உன் விளக்கங்களை எனக்குக் கூறு" என்ருர். சங்கரரது (பல தெய்வக் கருத்துக்கள்) அத்வைதக் கருத்துக்களைத் தொடாமலே, மஹாபிரபு தன்னுடைய சொந்த முறையிலேயே சூத்திரங்கட்கு

விளக்கங்களைக் கூறினர். நன்ருகக் கற்று உணர்ந்த சர்வபௌமர், மஹாபிரபு கூறிய விளக்கங்களில் உள்ள உண்மை, அழகு, விவாதம் செய்தமுறை ஆகியவற்றை ஆராய்ந்து உணர்ந்து, நான் இதுபோன்று எளிய இனிய உரையை பிரம்ம சூத்திரத்திற்கு யாரும் கூறிக் கேட்ட தில்லை. மேலும் அவர் சங்கரரது விளக்கங்கள் மஹாபிரபு வினது விளக்கங்களைப்போல் இயற்கையாக அமைய வில்லை என்றும் சொன்னர். அது முதல் அவர் ஸ்ரீ கிருஷ்ண சைதன்யரைப் பின்பற்றுபவராகவும், கடைப் பிடிப்பவராகவும் ஆகின்றேன் என்று கூறிப் பணிந்தார். சில நாட்களில் சர்வபௌமர் மிகச் சிறந்த வைணவராக மாறிவிட்டார்.

# சென்ற இடமெல்லாம் சிறப்பு

அக்காலத்தில் வெளிவந்த குறிப்பு ஒன்று இவ்வாறு கூறிச் செல்கிறது:- ஒரிஸா மாநிலம் முழுவதும் ஸ்ரீகிருஷ்ண சைதன்யரின் புகழ் பாடப்பட்டு வருகிறது. தினந்தோறும் நூற்றுக்கணக்காக அவரைத்தேடி வந்துகொண்டிருக்கின்றனர். வந்தவர்கள் அவரைப் பின்பற்றுபவர்களாக மாறிவிட்டனர். இவ்வாறுள்ள நிலையில் மஹாபிரபு தென்னிந்தியாவிற்கு விஜயம் செய்யவேண்டுமென எண்ணி கிருஷ்ணதாஸ் என்ற அந்தணருடன் தென்னுடு நோக்கிப் புறப்பட்டார்.

அவருடைய வரலாற்றினை எழுதுபவர்கள் பிரயாணத்தினைப்பற்றி விரிவாக எழுதி உள்ளார்கள். முதலில் கூர்ம க்ஷேத்ரம் என்ற இடத்திற்குச் சென்ருர். வாசுதேவர் என்ற தொழு நோயாளியைக் குணப்படுத்தினர். கோதாவரி நதிக்கரையில், வித்யா நகரை ஆள்பவராகிய ராமானந்த ராயைச் சந்தித்தார். அங்கு பிரேம பக்தி என்ற தலைப்பில் அவருடன் தத்துவ விசாரணை ஒன்றை நடத்தினர். அங்கு வேறு ஒரு அதிசயத்தினை நடத்திக் காட்டினர். 7 தால் மரங்களைத் தொட்டவுடன் அவை மறைதலையும் அதே

இடத்தில் ஸ்ரீ இராமச்சந்திரன் (தசரதன் மஹாராஜாவின் மகன்) ஒரு அம்பின் வாயிலாக மிகச் சிறந்த பலிமஹாராஜாவைக் கொன்றதையும் காட்டினார். அவர் தனது பிரயாணம் முழுவதும் வைணவத்தைப் பற்றியும், நாம சங்கீர்த்தனம் பற்றியும் பிரசாரம் செய்து வந்தார்.

ரங்கக்ஷேத்ராவில் வெங்கடபட்டர் என்பவரின் வீட்டில் மழைக்காலம் முழுவதையும் கழிப்பதற்காக சுமார் 4 மாதங்கள் கழித்தார். அங்கு அவர் வெங்கடபட்டர் குடும்பம் முழுவதையும் பத்து வயதே நிரம்பிய கோபால் என்ற மகன் உட்பட அனைவரையும் இராமானுஜ வைணவத்தில் இருந்து கிருஷ்ண பக்திக்கு மாற்றினார். அந்த கோபாலன் பின்னால் விருந்தாவனத்திற்கு வந்து ஸ்ரீ கிருஷ்ண சைதன்யரிடம் தொண்டாற்றிய ஆறு கோஸ்வாமிகளுள் ஒருவராகச் சிறந்து விளங்கியவர் பிரபோதனந்த சரஸ்வதி என்ற தனது மாமனால் நன்கு சமஸ்கிருதம் பயிற்றுவிக்கப்பட்ட கோபாலர் பல புத்தகங்களைப் பின்னால் வைணவத்தினைப் பற்றி எழுதினார்.

ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு தென் இந்தியாவின் பல பாகங்களுக்கும் சென்றார். தென் கோடியில் உள்ள கன்னியாகுமரி முனைக்கும் சென்று அங்கிருந்து இரண்டாண்டுகளில் பண்டரீபுரம் வழியாக பூரி சென்று அடைந்தார். இந்தக் காலகட்டத்தின் பிற்பகுதியில் துகாரம் என்பவரைத் சுத்தமான தெய்வீகத் தொண்டராகச் செய்து, அப்பொழுது முதல் அவரை மதபோதகராகச் செய்து விட்டார். அவரும் மதபோதகராகவே மாறிவிட்டாரென பம்பாயில் அரசுத் துறை அதிகாரியாகப் பணியாற்றிய சந்யேந்திர நாத் தாகூர் என்பவர் சேகரித்து வைத்த குறிப்பில் காணப்படுகிறது. தனது யாத்திரையின்போது புத்தர்கள், சமணர்கள், மாயாவாதிகள் போன்றவர்களிடம் சம்பாஷணை நடத்தியும் அவர்களை வைணவத்திற்கு மாறு மாறும் செய்தார்.

ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு பூரி நகரை அடைந்ததும் ராஜா பிரதாப ருத்ர தேவும் மற்றும் பல பிராமண பண்டிதர்களும் அவரது இயக்கத்தில் சேர்ந்தனர். அப்பொழுது அவருக்கு வயது 27; இருபத்தெட்டாவது (28) வயதில் வங்காளத்திற்குச் சென்றார். அங்கு மால்டாவில் உள்ள கௌட் வரை சென்றார். அங்கு ரூபர், சனாதனர் என்ற இரண்டு பெரிய புகழ்வாய்ந்தவர்களை சந்தித்தார். அவர்கள் இருவரும் கர்நாடக பிராமணரால் வந்தவர்களாக இருந்தபோதிலும் கௌட் பகுதியை அரசாண்டு வந்த ஹுசைன்ஷா என்பவரோடு தொடர்ந்த தொடர்பு கொண்டிருந்தமையால், அவர்கள் இருவரும் பாதி முஸ்லீம்களாகவே இருந்தனர். அவ்விருவருடைய பெயரும் தோபிர்க்காஷ்ளகர் மாலிக் என்று மாற்றப்பட்டு இருந்தது. அவ்விருவரும் பெர்ஷியசன், அராபிக், சமஸ்கிருதம் முதலியவற்றை நன்கு கற்றிருந்தாலும், மாநிலத்தின் உண்மையான ஊழியனாக இருந்தாலும் அரசர் அவ்விருவரையும் மிகவும் உள்ளன்போடு நேசித்தார் மறுபடியும் அவர்கள் ஹிந்து மதத்திற்கு ஹிந்துவாக வாழ ஒரு வழியும் தெரியவில்லையாதலால், மஹா பிரபு பூரியில் இருந்தபொழுது, தங்கட்கு (ஆத்மீக) விஷயங்களில் உதவி புரிய வேண்டுமெனக் கேட்டுக் கொண்டனர். மஹாபிரபு, அவர்களைத் தான் வந்து சந்திப்பதாகவும், ஆத்மீக விஷயங்களில் ஏற்படுகின்ற தொல்லைகளை நீக்க உதவி புரிவதாகவும் எழுதியிருந்தார்.

மஹா பிரபு கௌட்டிற்கு வந்த பொழுது, அவ்விரு சகோதரர்களும் தங்களது நெடுநாளைய கோரிக்கையுடன் மஹாபிரபுவின் முன் தோன்றினர், மஹா பிரபு அவர்களை பிருந்தாவனத்திற்குச் செல்லுமாறும், அங்கு தன்னை வந்து சந்திக்குமாறும் கட்டளையிட்டார்.

தன் தாயை மறுபடியும் சந்தித்து சாந்திபூர் வழியாக மறுபடியும் ஸ்ரீ சைதன்ய மஹா பிரபு பூரி வந்து சேர்ந்தார். பூரியில் சிறிது காலம் தங்கியபிறகு விருந்தாவனத்திற்குப்

புறப்பட்டுச் சென்றார். இச்சமயத்தில் மஹாபிரபுவுடன் பலபத்ர பட்டாசார்யா என்பவர் உடன் சென்றார். அவர் பிருந்தாவனத்திற்கு விஜயம் செய்தார். அங்கிருந்து பிரயாகை (அலஹாபர்த) வந்தார். வருகின்ற வழியில் குரானைப்பற்றி விவாதம் செய்து கொண்டே பல முஸ்லீம் களை வைணவர்களாக மாற்றினார். அப்படி மாறி வந்த வர்களின் வழியில் தோன்றிய மக்களை இன்றும் ''பதான் வைணவர்கள்'' என்று அழைக்கின்றனர்.

## ரூபகோப ஸ்வாமியின் இரண்டு பணிகள்

ரூப கோப ஸ்வாமி மஹா பிரபுவை அலஹாபாத்தில் சந்தித்தார். பத்து நாட்களில் மஹா பிரபு அவரை ஆன் மீகத்தில் சிறப்புடையவராகச் செய்து, அவரை பிருந்தா வனத்திற்கு தனது தூதுவராக அனுப்பினார். அவருடைய முதல் பணி, அறிவியல் பூர்வமாக தூய்மையான பக்தியை யும் தூய்மையான பிரேமையையும் பற்றி எழுதுவதாகும். இரண்டாவது பணி உலக மக்களின் மத நன்மைக்காக கிருஷ்ண பரமாத்மா துவாபரயுகத்தின் இறுதியில் புரிந்த தெய்வீக லீலைகள் சம்பந்தமான இடங்களை மறுபடியும் கண்டுபிடித்து மக்களுக்கு தெளிவுபடுத்துதல். ரூபகோ ஸ்வாமி பிருந்தாவனத்தை அடைவதற்காக அலஹாபாத்தி னின்றும் புறப்பட்டார். அச்சமயம் மஹாபிரபு காசிக்கு வந்து சேர்ந்தார்.

## காசியில் மஹாபிரபு

காசியில் சந்திரசேகர் வீட்டில் தங்கினார். தபன்மிஸ்ரா வின் வீட்டில் தினந்தோறும் தனக்குரிய பிக்ஷை(உணவு) யை ஏற்றுக் கொண்டார். இங்கு சனாதன கோஸ்வாமி மஹா பிரபுவுடன் வந்து சேர்ந்து கொண்டார். கிட்டத் தட்ட இரண்டு மாதங்கள் மஹாபிரபுவிடம் ஆன்மீக சம்பந் தமான அறிவுரைகளைப் (உபதேசங்களைப்) பெற்றுக் கொண்டார். வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பாக

கிருஷ்ணதாஸ் கவிராஜ் அவர்கள் மஹாபிரபு ரூபருக்கும் சனுதனருக்கும் போதித்த ஞானங்கள் மிகவும் விரிவாக விளக்கி உள்ளார்.

கிருஷ்ணதாஸ் உடனிருந்து எழுதிய எழுத்தாளரல்லர். ஆயினும் மஹாபிரபுவின் நேரடி வாரிசுகளான கோஸ்வாமி களிடமிருந்து செய்திகளை நேரடியாகச் சேகரித்து எழுதிய வர். ஸருதனருடையவும் ரூபருடையவும் மருமகனுன ஜீவ கோஸ்வாமி, 'ஸத்-ஸதர்ப' என்ற தனது ஒப்புயவர் வற்ற நூலில், பெரிய ஞானியான மஹாபிரபுவின் சீரிய தத் துவ விளக்கங்களை எழுதி உள்ளார். அத்தகைய மிக உயர்ந்த சான்றோர்களின் எழுத்துக்களிலிருந்து நாங்கள் செய்தி களை சேகரித்தும், ஸ்ரீ சைதன்ய மஹா பிரபுவின் கருத்துக் களை ஓரளவு தொகுத்தும் எழுதி உள்ளோம்.

காசியில் ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு தங்கியிருந்த பொழுது, மராத்திய பிராமணர் ஒருவர் காசியில் தங்கியி ருந்த சந்நியாசிகள் எல்லோரையும் உபசரிப்பதற்காக அழைத்திருந்தார். அப்பொழுது சைதன்யரும் வந்திருந்த மிகப் படித்த சந்நியாசி ஒருவருடன் கலந்து ஆய்வு (உரை யாடல்) நடத்தினுர். இக்கலந்துரையாடலில் ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு ஒரு ஆச்சரியப்படத்தக்க நிகழ்ச்சியினைச் செய்து காட்டினுர். அதைக் கண்ட இவரைப் பின்பற்றுகின்ற சந்நியாசிகள் யாவரும் ஆச்சரியமடைந்தனர். பிறகு ஒருவரோடு ஒருவர் மாறி மாறி சம்பாஷணைகளில் கலந்து கொண்டனர்.

பிரகாசானந்த சரஸ்வதி என்பவர் சந்நியாசிகளுக்கு எல்லாம் தலைமை ஏற்று விளங்கினுர். பிறகு சிறிது மாறு பாடான வாத விவாதங்களுக்குப் பிறகு சங்கரருடைய விளக் கங்களால் தவருக வழி காட்டப்பட்டதாக அறிந்து மகாப்ரபு கூறிய சமாதானங்களை ஏற்றுக் கொண்டனர். அவரு டைய கொள்கைகளை ஏற்றுக்கொள்வதாகவும் கூறினர்.

வெகு காலம் வரையில் மிகக் கற்ற மேதைகள் கூடசைதன்ய மஹா பிரபுவின் வாதங்களை மறுக்க இயலவில்லை, மேலும் ஸ்ரீ சைதன்யருடைய வாதங்கள் சந்நியாசியின் மனதுகளை எல்லாம் தொட்டு, அவர்களிடம் ஒரு வித நெகிழ்ச்சியை உண்டாக்கி விட்டது.

காசியில் உள்ள சந்நியாசிகள் யாவரும் மஹாபிரபுவின் காலடியில் விழுந்து வணங்கி, தங்கட்கு அருள்புரியுமாறு ஸ்ரீ சைதன்யரை வேண்டினர். சைதன்ய மஹாபிரபு தூய்மையான பக்தி என்ன என்பதை அவர்கட்கு போதித்தார். சந்நியாசியின் உள்ளங்களில் எல்லாம் கிருஷ்ண பிரமையை நன்கு ஏற்படுத்தினார். அவர்களின் மனதில் உள்ள குறுகிய மதபாத மனப்பாண்மையை விட்டுவிடச் செய்தது. சந்நியாசிகளின் அதிசயமான வாத விவாதங்களினால் காசி நகர வாசிகள் வைணவர்களாக மாறினர். அவர்கள் தங்களின் புதிய தலைவருடன் மகாசங்கீதத்தை நடத்தினர்.

## பூரிக்குத் திரும்பினார்

சனாதனரை பிருந்தாவனத்திற்கு அனுப்பிய பின்னர் காடுகளின் வழியே மறுபடியும் தனது தோழர் பலபத்ரருடன் மஹாபிரபு பூரிக்குத் திரும்பினார். வழியில் கண்ணனின் நாமத்தைக் கேட்டவுடனே யானைகளும் புலிகளும் நடனம் ஆடின. அதுபோன்ற அதிசயம் மிக்க நிகழ்ச்சிகளை மஹா பிரபு வரும் வழியில் நிகழ்த்தினார் என்று பாலபத்ரர் குறிப்பிடுகின்றார்.

இப்பொழுது இருந்து (31 வயதிலிருந்து) (48 வயது முடிய) இறுதிவரை மஹாபிரபு பூரியிலேயே தொடர்ந்து காசி மிஸ்ராவின் வீட்டில் வசித்து வந்தார். தோடா கோபி நாத் ஆலயத்தில் தனது இறுதி மறைவுவரையில் வசித்து வந்தார். அவர் மறைவு நாமசங்கீர்த்தனம் செய்து கொண்டு இருக்கும் போதே நிகழ்ந்தது. இந்த 18 ஆண்டு

காலத்தில் அவரது வாழ்வு அன்பும் கடவுள் பற்றும் உடைய தாகவே விளங்கியது.

## மஹாபிரபுவின் தொண்டர்கள்

மஹாபிரபுவைச் சுற்றிலும் எண்ணற்ற தொண்டர்கள் இருந்தார்கள். அவரைப் பின்பற்றும் தொண்டர்கள் வைண வத்தில் மிகவும் தீவிர பற்றுடையவர்கள். தங்களுடைய கல் வித் திறத்தாலும் உயர்ந்த நன்னடத்தையாலும் மக்களால் மிகவும் உயர்வாக மதிக்கப்பட்டவர்கள். தீவிர மதப்பற்றும், ராதாகிருஷ்ணன் மீது அன்பும் உடையவர்கள். புருஷோத் தமாசார்யா என்ற பெயரில் வழங்கப்பட்டு வந்த ஸ்வரூப தாமோதர்ர மஹாபிரபு நாடியாவில் இருந்த பொழுது மஹாபிரபுவுடன் இணைந்தார். காசியில் இருந்த காலே மஹாபுரபுவின் செயலாளராக இருக்க ஒப்புக் கொண்டு பணி புரிந்தார். கவிதையோ தத்துவமோ எதுவுமே ஸ்வரூபரால் தூய்மையானது என்றும் உபயோகமானது என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டாலொழிய அவை மஹாபிரபுவின் பார்வைக்கு கொண்டு செல்லப்படமாட்டா.

ராய் ராமனந்தர் மஹாபிரபுவின் இரண்டாவது அணுக் கத் தொண்டர். ராய் ராமானதரும், ஸ்வரூபரும் மஹா பிரபு வழிபாட்டின் சமயம் சிறந்த கருத்துக்களைச் சொல் லும்பொழுது கவிதைகளாகப் பாடுவர். மத சம்பந்தமான விஷயங்களில் பரமானந்த பூரி, மஹாபிரபுவின் அமைச் சராகப் பணியாற்றியனர். மஹாபிரபுவின் வாழ்க்கை யில் நடந்த நூற்றுக்கணக்கான பல்வேறு நிகழ்ச்சிகளை வரலாற்று ஆசிரியர்கள் எழுதி உள்ளார்கள். அவை அனைத் தையும் இங்கே நாங்கள் எழுத வேண்டாம் எனக் கருது கிறோம்.

மஹாபிரபு குறுகிய காலமே உறங்கினர். நாள் தோறும் அவருடைய எண்ணங்கள் வெகு தொலைவுக்குச் சென்று கொண்டே இருப்பதனை மஹாபிரபுவினை பின் பற்றுபவர்களும் புகழ்பவர்களும் கவனித்துக் கொண்டே உள்

ளனர். பிருந்தாவனத்தில் கண்ணனைத் துதித்தார். தன்னுடைய தொண்டர் குழாத்தின் வாயிலாக கண்ணன் புகழ் பரப்பிக் கொண்டே இருந்தார். புதியதாக வந்து தன்னைக் காண்கின்ற மதப்பற்றுடையாரோடு சம்பாஷிக்கின்றார். கண்ணன் புகழ் பாடினார்; நடனம் ஆடினார். தன்னைப் பற்றி எதனையும் கருத்தில் கொள்ளாதவராயிருந்தார். சில நேரங்களில் தன்னையே மறந்து தெய்வீக நிலையில் லயித்து விடுவார்.

அவரைப் பார்க்க வந்தவர்கள் அனைவரும் மனித நன்மைக்காக கடவுளே மிக அழகான ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவாக வந்துள்ளார் என்று நம்பினர். நாடியா நகரத்திற்குச் செல்பவர்கள் மூலமாக தன் தாய்க்கு மஹாபிரசாதத்தினை அவ்வப்பொழுது அனுப்பி, தன் தாயின் மீதுள்ள அன்பினைச் செலுத்திக் கொண்டேயிருந்தார். அவர் இயற்கையாகவே எப்பொழுதும் மனதுக்கினியவராகவே இருந்தார். அவருடைய இனிமையான தோற்றம் அவரை நோக்கி வந்தவர்களெல்லாம் மகிழ்ச்சியினையே தந்தது.

வங்காளத்தில் தன்னுடைய பிரதிநிதியாக (அணுக்கத் தொண்டராக) நித்யானந்த பிரபுவை நியமித்து இருந்தார். வடபாரதம் முழுவதும் அன்பைப் பிரசாரம் செய்வதற்காக் பிருந்தாவனத்திற்குத் தன்னுடைய ஆறு கோஸ்வாமிகளையும் அனுப்பி இருந்தார். புனிதமான தூய வாழ்விலிருந்து மாறி வாழ்கின்ற தன்னைப் பின்பற்றுபவர்களை, தொண்டர்களைத் தண்டித்தார். இளைய ஹரிதாஸ் விஷயத்தில் மிகத்தீவிரமாக வேண்டுமென்றே செய்தார்,வந்தவர்களுக்கு சரியான போதனை செய்வதில் என்றுமே அவர் குறைவு செய்யவில்லை. நிறைவாகவே செய்தார். இதை அவர் இரகுநாத் தாஸ் ஸ்வாமிக்குச் செய்த போதனையிலிருந்தே காணலாம். அவர் ஹரிதாஸ் (முதியவர்) பால் காட்டிய நடத்தையே அவர் தெய்வீக உணர்வுடையவர் பால் எவ்வளவு அன்பாக உள்ளார் என்பதையும், தெய்வீக சகோதரத்

துவத்தில் ஜாதிப்பாகுபாடு கூடாது என்பதை எவ்வளவு வலியுறுத்தினர் என்பதையும் அறிகிறோம்.

இப்பொழுது மஹாபிரபுவோடு தொடர்பு கொள்ளாத வர்கட்காக, மஹாபிரபுவின் போதனைகளை விளக்க இருக் கிறோம். இச்சிறிய ஏடு மஹாபிரபுவின் புனிதமான கொள் கைகளில் முக்கியமானவற்றின் விளக்கங்களை கூற இருக் கிறது.

# ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவின் புனிதமான கொள்கைகள்

ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு மிதலில், உலகிலுள்ள வாதப் பிரதிவாத நியாயங்கள் ஆத்மீக பிரதேசத்தை அசைவிக்க மாட்டா. காரணம் என்கிற யுக்தியானது இந்த விஷயத்தில் சக்தியற்றதாகின்றது. ருசி (அனுபவம்) மிகச்சிறிய அளவில் கூட மனிதனிடத்தில் இருந்தால் தெய்வீக உணர்வினை தெரிந்துகொள்ள முடிகிறது.

உள் உணர்வுத் தூண்டுதல் ஒன்று மட்டுமே தெய்வீக உலகப் பொருள்களுக்கு (கருத்துக்களுக்கு) விளக்கம் தர முடியும். மேம்பாடான நிலையிலிருந்து கீழே இறங்கி வரு கின்றதாகிய உள் உணர்வுத் தூண்டுதல் தூய்மையான பரி சுத்தமான ஆத்மாக்களின் மூலமாக ''வேதங்கள்'' என்று அழைக்கப்படுகின்ற (நூல்கள்) வற்றின் வாயிலாக உலகில் நிலவுகின்றன. வேதங்களும் அவற்றின் விளக்க நிலையில் விளங்குகின்ற புராணங்களும்தான் தெய்வீக, சாசுவதமான இயற்கைக்கு (உலகத்திற்கு) சாட்சியங்களாக விளங்கி வரு கின்றன. அதனால் வேத உண்மைகள் மட்டுமே மிக உயர்ந்த தெய்வீக நிலை பற்றிய கருத்துக்களை அறிய உத வுகின்ற ஒரே உண்மை. பகுத்தறிதல் ஒரளவு உள் உணர்வுத் தூண்டலுக்கு உதவுகின்றது என்பதனை நாம் உணர்ந்தா லும் அஃது துணை சாட்சியமாகவே இருக்கின்றது. மஹா

பிரபுவின் கருத்துப்படி வேதம் நமக்கு ஒன்பது விதமான கொள்கைகளை (முடிவுகளை) போதிக்கிறது.

1. ஹரி (எல்லாம் வல்லவர்) ஒருவரே; இரண்டாவது இல்லாதவர்.
2. அவர் எப்பொழுதும் எல்லையில்லாத சக்திகளை உடையவர்.
3. அவர் ரஸ (ஆனந்த) க் கடலாக விளங்குபவர்.
4. ஆத்மா அவரினின்றும் (ஹரி) பிரிந்த ஒன்று
5. சில ஆத்மாக்ள் பிரகிருதியில் அகப்பட்டுக் கொள் கிறது அல்லது மாயையில் அகப்பட்டுக் கொள் கிறது.
6. சிலவகை ஆத்மாக்கள் பிரகிருதியின் (மாயையின்) பிடியிலிருந்து விடுபட்டு விடுகின்றன.
7. தெய்வீக, உலக சம்பந்தமான கருந்துக்கள் யாவும் ஹரியின் (எல்லாம் வல்லவர்) பேதம் அபேதம் ஆகிய தன்மையின் சம்பந்தப்பட்டவைகளே
8. ஆத்மீக உலகில் நிலவுகின்ற மிக மேலான பொருளை அடைய பக்தி ஒன்றுதான் உயரிய வழி
9. கண்ணன் மீது காட்டுகின்ற பிரேமை ஒன்றுதான் மேலானதாக விளங்குகின்ற தெய்வீக நிலையினைப் பெறுகின்ற வழி.

நாம் இப்பொழுது அவற்றை ஒன்றன் பின் ஒன்றாக விளக்குவோம்.

# கொள்கைகளின் விளக்கங்கள்

## 1

ஹரி (மேலான பொருள்) ஒருவரே; இரண்டாவது இல்லாதவர்; ஆரிய மதக கொள்கைக்களின்படி படைப்பது சம்பந்தப்பட்ட கொள்கைகளுக்கு பிரம்மா கடவுளாக உள்ள வர்.அழிக்கும் தன்மைகள் சம்பந்தப்பட்டவற்றை 'சிவன்' என்னும்கடவுளாகக் கருதுகின்றனர்.இந்திரன் என்பவர்சிறு தேவதைகளின் தலைவராகக் கருதப்படுகிறார். அதனால் அவர்களெல்லாம் மிக மேலான கடவுளர் அல்லர், எல்லாம் வல்லவரல்லர். ஆனால் பல்வேறு கருத்துக்களுக்கு (பொருள்களுக்கு) பிரதிநிதிகளாக விளங்குபவை. அவைக ளெல்லாம் தங்கட்குரிய சக்திகளை மூலமாகத் தோன்றிய பொருளிலிருந்து பெற்றுள்ளன. அதனால் அவைகளெல் லாம் ஹரி அல்லது பகவானுக்குத் தொண்டு செய்பவை களாக அல்லது கீழ்ப்பட்டவைகளாகக் கருதப்படுகின்றன.

மறுபடியும் கடவுள் பற்றி மூன்று விதமான, தெளிவான கொள்கைகள் நிலவுகின்றன. 1) பல தெய்வக் கொள்கை களில் நிலவும் சூன்யமாகிய பிரம்மக் கொள்கை (Negative Brahman) 2) யோகநிலைப் பயிற்சி பள்ளிகளில் நிலவு கின்ற உலகம் முழுவதும் நிலவுகின்ற பரமாத்மா 3) பெருமை, வலிமை, புகழ், அறிவு, மேம்பட்ட தன்மை களைக் கொண்ட தனக்கு என ஏற்றுக் கொண்ட கடவுள் கொள்கை.

எனவே, பிரம்மன், பரமாத்மா ஆகியவை பற்றிய கருத் துக்கள் பகவான் ஹரி-எல்லாம் வல்லவர் என்ற கருத்துக் களோடு சேர்க்கப்பட்டன. மனிதன் கருத்துக்கள் யாவும் மன அளவில் அல்லது சமய அளவில் நிலவுகின்றன. மனத் தளவில் தோன்றுகின்ற கருத்துக்கள் குறைபாடுடையன;

அவை உண்டாக்கப்பட்ட பொருள்களோடு (கருத்துக்கள்) தொடர்புடையன. மேலான பொருளை அடைய தெய்வீக (சமயக்) கருத்துக்களே மிக நெருங்கிய தொடர்புடையன,

## பகவானைப் பற்றிய இரண்டு கருத்துக்கள்

மறுபடியும் பகவானைப் பற்றிய கருத்துக்கள் இரண்டு வகையாக உள்ளன. ஒரு வகையில் கடவுள் வடிவு அவருடைய சொந்த பெருமையினால் அதிக சக்தி வாய்ந்ததாக உள்ளது. இன்னொரு வகையில் அதனுடைய சொந்த அழகு அவருடைய சொந்த பெருமைகளைவிட அதிக சக்தி வாய்ந்ததாக உள்ளது. முதல் கருத்து வைகுந்தத்தில் வாழ்வதாகக் காட்டப்படுகின்ற நாராயண வடிவில் உள்ளது. அவர் பிரபுக்களுக்கெல்லாம் பிரபுவாகவும், கடவுள்கட்கெல்லாம் கடவுளாகவும் விளங்குகிறார். இரண்டாவது கருத்து பின் வருபவற்றில் பிரகாசிக்கிறது. ஹ்லாதினி சக்தியில் (இன்பத் தினைப்பில்) மிக அழகு வாய்ந்த ராதிகா-கண்ணனைக் காணப்படுகிறது. மிக மேம்பாடான பரவசத்தில் ஆழ்ந்து விடுதலான தன்மையில் காணப்படுகிறது.

# கண்ணனைக் காணலாம்

கண்ணன் மனிதருள் மனிதகனைத் தோன்றுகிறான். மறுபடியும் தெய்வங்களுக்கெல்லாம் மேலான தெய்வமாகவும் தோன்றுகின்றான். ஸ்ரீ கிருஷ்ணர் எல்லோரையும் நேசிக்கிறார்; எல்லோரையும் கவர்ச்சி செய்கிறார். எல்லா ஆத்மாக்களையும் பரவசத்தில் ஆழ்த்துகிறார். அவரும் அவருடைய உலக உறவின் தொடர்புகளும் முழுக்க முழுக்க தெய்வீக சம்பந்தமானவை. ஜடப் பொருளாலான உலக சம்பந்தம் உடையவை அல்ல. ஜடப் பொருள்கள் பற்றிய ஞானம் கண்ணபிரானை அடையப் பயன்படாது.

மனிதனிடம் காணப்படுகின்ற (தெய்வீக) உணர்வு ஒன்றே கண்ணனைப் பார்ப்பதற்கு உதவும்; கண்ணனோடு தொடர்புகொண்டு உறவு கொள்வதற்குப் பயன்படும் ஜடப் பொருள்களோடு (கூட்டுப் போட்டுக் கொள்கிற) தொடர்பு கொள்கிறவர்கள் தாழ்நிலைக்குப் போவதோடல்லாமல் கண்ணனைப் பார்ப்பதற்குரிய (திருஷ்டி) கண்ணனையும் இழந்துவிடுகிறார்கள்; தெய்வீக உலகில் கண்ணன் நிகழ்த்து கின்ற லீலைகளையும் காண இயலாது.

ஆனால் கண்ணன் தன்னுடைய மேம்பாடான சக்தியினாலும், தனி உரிமையினாலும் எல்லா மனிதர்களுடைய கண்களுக்கு முன்பாக பிருந்தாவன லீலைகளைக் காட்டலாம். பகுத்தறிவுடைய மனிதன் கண்ணனையும், கண்ணனுடைய லீலைகளையும் நம்பமுடியாதவைகளாக நினைக்கலாம். அவனுடைய தெய்வீக எண்ணங்கள் வளர வளர அவர்கள் கண்ணனைக் காணலாம். கண்ணனிடம் அன்பு செலுத்தலாம். தன்னுடைய இதயம் முழுவதும் கண்ணனை எண்ணத்தால் நிரப்பலாம்.

நம்முடைய இந்தச் சிறிய ஏட்டில் முழுவதுமாகவும், விரிவாகவும் அதனைப்பற்றி எழுத இயலாது. நாம் அதனால் இதனைப்பற்றிய சிந்தனைகள் பின்வரும் கருத்துக்களோடு நிறுத்தி விடுகிறோம். எங்களைக் கட்டுப் படுத்துகிற (தளைப்படுத்துகிற) செய்திகளை சிறிது சிறிதாக விட்டுவிடு. உன்னுடைய தெய்வீக சிந்தனைகளை எங்களது உன் இதயத்தில் ஏற்படுத்துக். தெய்வீக உணர்வுகளையும் சிந்தனைகளையும் மறுக்கிற பகுத்தறிவு வாதிகளின் மீது கொள்கின்ற வெறுப்புகளைக் கொஞ்சம் கொஞ்சமாக நீக்கி விடு. எளிமையாக இரு. தெய்வீக வாழ்வில் முன்னேற வேண்டுமென்ற எண்ணம் உடையவர்கள் மதிப்பிற்குக் கற்றுக்கொள். தெய்வீகச் சிந்தனையுடைய மனிதர்கள் முன் மட்டுமே உன்னுடைய மனம், மொழி, காயத்தால், (உடலால்) இவற்றை வளர்க்க முயற்சி செய். அந்த நிலையில் வெகு விரைவில் நீ கண்ணனைக் காண்பாய்.

ஸ்ரீ கிருஷ்ணர் ஒரு கற்பனையான பொருள் அல்ல அறிவற்றவர்களால் மேலான பரம்பொருள் என்று கற்பனை செய்யப்பட்ட ஒரு கருத்துப் பொருள் என நினைத்துப் பார்ப்பதற்கு உனக்கு எவ்வித உரிமையும் இல்லை. பொருள் களிலிருந்து தனித்து எடுக்கப்பட்ட கருத்துப் பொருள்களாக கண்ணனைக் கருத இயலாது. வரையறுக்கப்பட்ட கொள்கைகளைக் கண்டுபிடிக்கின்ற மனிதர்களால் ஒப்புக் கொள்ளப்பட வேண்டிய பொருளும் கண்ண பரமாத்மா அல்ல.

கண்ணபிரான் அழியாத, தெய்வீக சம்பந்தமான உண்மையான பரம்பொருளாக எல்லாவற்றினின்றும் விடுபடுகின்ற ஆத்மாக்களில் பிரதிபலிக்கின்ற ஒன்றாக விளங்குகின்ற பரம்பொருள். ஆத்மாவின் உள்மனத்தி லிருந்து தோன்றுகின்ற அன்பிற்குக் கட்டுப்படுகின்ற மேலான பரம்பொருள். அவரை அப்படியே ஏற்றுக்கொள் ளுங்கள். நீங்கள் உங்கள் மனக்கண்முன் அப்படியே முழுவதுமாக அவரைக் காண்பீர்கள். அழியாத பரம் பொருளை வர்ணிப்பதற்கு வார்த்தைகள் சக்தியற்றுவிடு கின்றன. மிக உயர்ந்த, சிறந்த தெய்வீகக் கருத்துக்களின் மொத்த வடிவமே கண்ணபிரான். அவரைப் பற்றிய விவாதங்களில் ஈடுபடுதல் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதாகும். கண்ணபிரானின் அருளிலிருந்து விடுபட்டு தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதற்கு வழிவகுக்கிறது.

அதனுல் அவரைப் பற்றிய விளக்கங்கள், அவரது பெயர், வடிவு, அவரது புகழ்ச்சிகள், லீலை முதலியவை களை தெய்வீக உணர்வுடன் நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஜடப் பொருள் சம்பந்தமான தொடர்புகளை அப்படியே நீக்கிவிட்டு கருத்துக்களை மட்டும் அப்படியே கொள்ள வேண்டும்.

# 2

ஹரி எல்லையில்லாத சக்தியுடையவர். அதாவது எல்லை கடந்து விளங்குகிறது. அவருடைய சக்திகள் அவருடைய தன்மையிலேயே அடங்கியுள்ளன. உலகியல் பொருள்களில் மனித ஆளுமைக்கும் சக்திக்கும் வேறுபாடு உள்ளது; பொருளுக்கும் குணத்திற்கும் வேறுபாடு உள்ளது. வடிவு, பெயர், செயல் ஆகியவைகளுக்கு இடையே வேறுபாடு உள்ளது. ஆனால் பரமாத்மாவும் அதனுடைய வடிவு, பெயர், குணம், செயல் ஆகியவைகளும் ஒன்றியமைந்து இருக்கின்றன. இதனை சாதாரண காரண காரியங்கட்கு உட்படுத்தி, பெரிதுப்படையான நிலைகளைக் காண இயலாது.

கண்ணன் (தனக்குள்) தானே முதன்மையாளராக இருக்கிறார். கண்ணன் தன் விருப்பப்படியே மேலான்மையைப் பயன்படுத்துகிறார். அஃது எந்த கட்டத்திற்கும் கட்டுப்படாதது. ஏனென்றால் எல்லா சட்டங்களும், கண்ணனின் விருப்பத்திற்கும் சக்திக்கும் ஏற்றபடி உண்டானவையே. சக்தி அதனைப் பயன்படுத்துதலினின்று அறியப்படுகிறது. உலகில் அவரது சக்தியின் மூன்றுவிதகுணங்களைத்தான் நாம் காணுகின்றோம். இப்பொருளியல் உலகில் கண்ணனது சக்தியினால் பொருள்கள் தோன்றுகின்றன என்பதை நாம் அறிகிறோம். இதனை வேதம் 'மாயா சக்தி' என அழைக்கிறது.

நாம் மனித இனத்தைப் பார்க்கிறோம். இதிலிருந்து பரம்பொருள், எல்லையுடைய நிறைவில்லாத ஆத்மாவினைப் படைத்திருப்பதை உணர்கிறோம். சாஸ்திரங்கள் அவற்றை ஜீவ சக்தி என்கின்றன.

மேலான சாஸ்வதமான தெய்வீக நிலையுடைய ஒன்று தன்னிலையில் இருப்பதை நாம் ஒப்புக் கொள்கிறோம். அவருடைய சக்திகள் முழுமையான சரியான தெய்வீக சக்திகளாக வெளிப்படுத்தப்பட கூடியவை என அறிகிறோம். வேதங்கள் இதனை 'ஆத்ம சக்தி' அல்லது 'சித் சக்தி' என அழைக்கின்றது.

இத்தகைய குணங்களை எல்லாம் ஒன்று சேர்த்து விளங்கும் மேலான பரம்பொருளை வேதங்கள் 'பரா சக்தி' என அழைக்கின்றது. உண்மையாக, சக்தியை அதனை உடைய மனிதனிடமிருந்து தனியாகப் பிரித்து அடையாளங் காண இயலாது. ஆயினும் தனித்தனியாக சக்திகளைப் பிரித்து தனித் தனியாகச் செயல்படுவது போன்று காட்டப் படுகிறது. இதனை அசிந்த்யா—பேதா—பேத பிரகாசம் எனலாம். அல்லது ஒரே நேரத்தில் பிரித்துக் காட்டக் கூடியதும் பிரித்துக்காட்ட இயலாததுமானதுமாக நினைத்தற் கரிய பொருளாக விளங்குகிறது. ஹரி, தன்னிச்சைப்படி சட்டங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டு விளங்கிக் கொண்டு, தன்னுடைய எல்லையில்லாத சக்திகளை வெளிப்படுத்தி, தான் மட்டும் மாறுமல் அன்று போல இன்றும் என்றும் விளங்குகிறார். இது எப்படி என்று அறியமுடியாமல் இருக்கிறது. ஆனால் ஆத்மா தனது உள்ளுணர்வில் உண்மையான நிலையில் விளங்குவதை உணர முடிகிறது.

## 3

இறைவன் ஓர் ரஸக் கடலாக விளங்குபவர் பரவசம் மிக்க நிலையினை பாவம் என்கின்றனர்.

அஃது ஸ்தாயி-பாவம், விபாவம், அனுபாவம், சாத்விக சஞ்சாரி என்ற நிலைகளை உள்ளடக்கியது. ஆலம்பனம், உத்தீபனம் என்று இரு நிலைகளாக விபாவ நிலை

பிரிக்கப்பட்டு உள்ளது. விஷயம், ஆச்ரயம் என்று மேலும் இரு நிலைகளாக ஆலம்பனம் பிரிக்கப்பட்டுள்ளது. 'ஸ்தாயி பாவம்' என்ற கொள்கையினைத் தன்னகத்தே உடையது ஆச்ரயம் எனப்படுவது.

விஷயம் என்பது ஸ்தாயி பாவத்தால் கட்டுப்படுத்தப்பட்டது. ஸ்தாயி பாவம் எனபது ரதி; (காதல்) அதாவது தூய ஆத்மீகமான நுண்ணயர்வு ஆச்ரயம், விஷயம், ஸ்தாயீஇவை எல்லாம் கூடி தின் பயன், அந்நிலை செயல்பட முனைகின்ற பொழுது, அனுபாவம் என்று அழைக்கப்படும் சில வெளிப்படைக் குறிகள் தென்படுகின்றன. மொத்தம் 13 விதங்களாகும் (விவரம் 79ம் சுலோகத்தின் ஸமஸ்கிருத உரையில் காண்க) மற்றும் எட்டுவிதமான மனநிலை பாவங்களை பயம், நடுக்கம் போன்றவை சாத்விக பாவங்கள் என்று அழைக்கின்றனர்.

சந்தோஷம், துக்கம் போன்ற 33 பாவங்களை சஞ்சாரி பாவங்கள் என்ற நிலையில் காட்டுகின்றனர். இவைகள் ஆத்மாவில் ஒன்ருகச் சேர்ந்து ரஸம் (மெய்ப்பாடு) என்ற ஒன்ருக மாறுகிறது. மனிதனைக் காட்டிலும் மற்றைய பொருள்களில் இந்த மனோபாவங்கள் மிகவும் வயப்படுத்துகின்ற நிலையில் காணப்படுகின்றன. ஆனுல், ரஸம் அழிவில்லாத தன்மையுடையதாதலால் மிகமேலான ஹரியோடு (பரம்பொருள்) ஒன்றியமைக்கப்பட்டுள்ளது.

ஹரி ரஸக்கடலாக விளங்குகின்றவர். ஆத்மாவால் ரஸத்தின் ஒரு துளிதான் ஏற்றுக்கொள்ள முடிகிறது. ரஸம் இயற்கையாகவே தெய்வீகத் தன்மை வாய்ந்தது. ஆனுல், மாயையினுல் ஆட்கொள்ளப்பட்ட மனிதனுேடு தொடர்பு கொள்கின்றபொழுது பொருட்டிலனின்பம் அனுபவிக்கின்ற நிலையில் அது தலைகீழ் நிலையில் காணப்படுகிறது.

புலனின்பம் அனுபவிக்கின்ற நிலையில் ஸ்ரீ வாத்மா மூனதில் ஒன்றிவிடுகிறது. மனம் தனது ஐந்து வகையான

புலன்களால் ஈர்க்கப்பட்ட ஐந்துவகைப் பொருள்களை அனு பவிக்கத் தொடங்குகிறது. தனது உண்மை நிலையை உணர்ந்த அதாவது அவித்வையால் கட்டுண்ட ஜீவன் போகும் புறம்போக்கு இது. மனம் உள்நோக்கிப் பார்க்கின்ற பொழுது, அது தெய்வீக ரஸத்தை அனுபவிக்கிறது. தெய் வீக ரஸத்தை அனுபவிக்க அனுபவிக்க மாறுபட்ட நிலையில் புற இன்பங்களை அனுபவித்த மனம் திருந்திவிடுகிறது. தெய்வீக நிலை கொண்ட ரஸத்தில் ஆத்மாக்கள் யாவும் ஒன் றோடொன்று தொடர்பு கொண்டும், தேச, கால, வர்த்த மானங்கட்கு அப்பாற்பட்டு, அழகுகளுக்கெல்லாம் அழகாக விருந்தாவனத்தில் நிலவுகின்ற பரம் பொருளின் மீது தடை யற்ற செயலின் வாயிலாகத் தொடர்பு கொள்கின்றன.

மேலான தெய்வீக சக்தி அல்லது ''சித்சக்தி'' யில் ஹரி அல்லது மேலான பரம்பொருள் தன்னுடைய எல்லையில்லாத சுதந்திரமான விருப்பத்தோடு பரவச நிலையில் இருக்கிறார். ''சித்சக்தி'' யின் ''ஹ்லாதினி'' என்ற பிரிவு எல்லை இல் லாத ஆனந்தத்தை தருகிறது. சித்சக்தியின் உள்ள சம்வித் (ஞானம்) என்ற பிரிவு எல்லா தன்மைகளையும், தொடர்பு களையும், பற்றுக்களையும், உண்டாக்குகிறது. சித்சக்தியில் உள்ள ஸந்தினி பிரிவு தெய்வீக பாவத்தோடு சேர்ந்து மக் கள், உயிர் வாழ் இனங்கள், மற்றும் பலவற்றையும் (சுதந் திரமான விருப்பத்தையும், இறைவன் வாழ் இடங்களையும் தவிர) உண்டாக்குகிறது. நாம் காணும் மேலே சொல்லப் பட்ட அனைத்தும் சித்சக்தி அல்லது தெய்வீக சக்தியால் உண்டாக்கப்பட்டவையே.

கால, தேச வர்த்தமானங்கட்கு உட்பட்ட பொருள்கள் அதாவது மாயையின் தோற்றங்கள் ''சித் ஜகத்'' என்று சொல்லப் படுகின்ற உலகில் அல்லது''விருந்தாவன்''போல் உள்ள தெய்வீக உலகில் இடம்பெறா. அதனால் உலகில் காணப்படுகின்ற பொருள்கள் தெய்வீக உலகில் காணப்படு கின்ற பொருள்கள் போல் தோன்றினாலும் மொத் தத்தில் அவை ஒன்றாகமாட்டா. ''சித் ஜகத்'' ''மாயா

ஜகத்'' தின் மாதிரி போன்றது. ஆனால் ஒன்றல்ல. மாயா ஜகத்தைப் போன்றதுதான் சித் ஜகத் என்கிற எண்ணம் நமக்கு தோன்றக் கூடாது. இந்த எண்ணம் ''எல்லாம் தெய்வவடிவு'' என்பதுபோலாகும், அதை நாத்திகம் என்றும் கூறலாம். ஆத்மீகத் தன்மையற்ற பகுத்தறிதல் இந்த நிலைக்கு இழுத்துச் செல்லும். புதிய புதிய ஐயங்களை யும் உண்டாக்கும்.

தெய்வீக அன்பு ஒன்றையே அனுபவிக்க வேண்டும் என்று எண்ணுபவர்கள் தவறான எண்ணத்தைத் தூண்டு பவர்கள் என்று இதனை விட்டு விட வேண்டும். கிருஷ்ண பர மாத்மாவின் மேலான பரவச பாவம் ''சித் ஜகத்'' தில் மட் டுமே நிலையாக விளங்குகிறது; கீழ் நிலையில் இருக்கும் நாம் அறிய வேண்டியது. பெரிய சிறந்த தெய்வீக உலகில் சிறந்து விளங்கும் கண்ணபிரானின் லீலைகளுக்கும் நமது கண்களுக்கும் இடையே ஒரு திரை இருக்கிறது. கண்ணபிரா னின் அருட்பார்வை நம்மீது விழுகின்ற பொழுதுதான் அந்த மறைவு அகலுகிறது. நாம் அந்த தெய்வீக லீலையினை அனு பவிக்கும் வாய்ப்பைப் பெறுகின்றோம். இறைவன் மறுபடியும் அந்தத் திரையை தொங்கவிடவேண்டும் என்று எண்ணுகிற பொழுது, நம்முடைய கண்களின் முன்பிருந்து விருத்தா வனக் காட்சிகள் மறைகின்றன. என்றால் எப்படி அந்தக் காட்சிகளைக் காணமுடிந்ததோ, அனுபவிக்க முடிந்ததோ அதே போல் நீங்களும் காணலாம்; அனுபவிக்கலாம். காரண காரியமின்றியும் அன்பர்களே! தக்க ஆன்யவு இல்லாமல் இப்படிப்பட்ட முக்கியமான பொருளை இழந்து விடாதீர்கள்.

# 4

ஆத்மாக்கள் அவரிடமிருந்து பிரிந்தவை; ஆத்மா என்பது மனிதனுடையது ஆனாலும், விண்ணவர்களுடையது ஆனாலும், மிருகங்களினது ஆனாலும் ஒன்றுதான். ஆத்மாக்களின் ஸம்ஸாரத்தில் உழலும் தன்மையில் அதாவது பல தரப்பட்ட பிறவிகள் எடுப்பது போன்றவற்றில் மஹாபிரபு நம்பிக்கை வைத்திருந்தார் என்பதனை நன்குஉணர்ந்திருக்க வேண்டும். சில மதங்கள் அவற்றை ஆதரிக்காமல் இருத்தலால் கற்றவர்களில் சிலர் அந்தக் கொள்கையினை நம்ப மறுக்கின்றனர். ஏனென்றால் அது ஒரு குறிப்பிட்ட சில மதக்குழுக்களில் மறுக்கப்படுகிறது என்பதற்காக மறுப்பது தயாளமான தன்மையல்ல. உண்மையில் காரிய காரணம் போன்றவை அவைகளை அலசி அறியக்கூடிய நிலையில் இல்லை.

ஒளிவு மறைவு இன்றி ஆராய்ந்து பார்ப்போமேயானால் பலநிலைகளில் மறுபிறப்பு முதலிய கொள்கைகளை நம்ப முடியாமல் இருக்க எந்தக் காரணமும் புலப்படவில்லை. அதற்கு மாறாக, நம்முடைய விருப்பு வெறுப்பு அற்ற நடுநிலையான மனம் அக்கொள்கையினைச் சார்ந்து இருப்பதனைக் காணலாம். ஒரே ஒரு முறைதான் ஆத்மா வாழ்க்கையில் (சோதனை) முயற்சி செய்ய முடியும் என்ற நம்பிக்கை நியாயமற்றது; மனவிரிவு இல்லாதது;கடவுள் எல்லா நன்மைகளும் செய்பவர் என்ற நம்பிக்கைக்கு மாறாக உள்ளது.

நமது தெய்வீக உணர்வுகள் அக் கொள்கையினை ஆதரிக்கின்றது; தெய்வீக உணர்வுகளின் கலயமாக விளங்கும் வேதங்களும் பல்வேறு நிலையில் உள்ள ஆத்மாக்கள்

தொடர்ந்து உலாவிக் கொண்டிருக்கின்றன என்பதையே நமக்குப் போதிக்கின்றது.

அதனால் ஆத்மாக்கள் இடம் மாறிப்பிறக்கும் கொள்கையினை நம்மால் விடமுடியாது. நம்ப மறுக்கும் கொள்கையினை நாம் வைத்துக் கொள்ள இயலாது, எவ்வளவு படித்தவராக இருந்தாலும், சிறந்த விஞ்ஞானியாக இருந்தாலும் அவரிடமும் சிறிது தவறு இருக்கும். தனி மனித அளவில் பொருந்தக் கூடியது தேச அளவிலும் மத அளவிலும் பொருந்தும். ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவின் கருத்துப்படி மனித ஆத்மா மேலான தெய்வீக ஆத்மாவின் ஒரு அணு வளவு பகுதியே. குறிப்பாக தெய்வீகத்தன்மை வாய்ந்த ஜீவன்களை பிறப்பிக்கும் சக்தி. பகவானிடம் உள்ளது. ஆயினும் அவைகள் மாயையின் வீச்சுக்கும் ஆட்பட்டு கடவுளின் தொண்டர் என்கிற நிலையை மறக்கின்றனர். கடவுளை சூரியனுக்கு ஒப்பமைக்கலாம். ஜீவன்கள் சூரியனுடைய மிகச்சிறிய கதிர்நுணுக்கங்கள் போன்றவை. அவை கடவுளின் காக்கும் குணமின்றி இயங்க இயலாதவையாகும். 'பகுதி' என்ற சொல் கல்லைக் கோடாலி கொண்டு பிளக்கப்பட்ட 'துண்டு' என்ற பொருள் கொண்டதல்ல.

ஆனால் ஒரு விளக்கிலிருந்து ஏற்றுவிக்கப்பட்ட மற்றொரு விளக்கு போன்றதாகும். அல்லது இரசவாதம் செய்து கிடைத்த தங்கம் போன்றதாகும். எரிகின்ற தீயிலிருந்து விடுவிக்கப்பட்ட தீயுள் அணுவிற்கு ஆத்மாவை ஒப்புமைப் படுத்தலாம். ஒவ்வொரு ஆத்மாவும் மூலத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் குணங்களைப் பெற்றுக் கொள்ளும். அதன் விளைவாக ஓரளவு சிறிய சுய சிந்தனையும் பெற்றுள்ளது. இயற்கையாக இந்த ஆத்மாக்கள் சித்-ஜகத் (உலகம்)திற்கும் மாயா உலகத்திற்கும் இடையில் அமைந்துள்ளன. கடவுளுக்குத் தொண்டு செய்ய விரும்புவார்கள் கீழ் நிலைக்குத் தள்ளப்படுவதினின்றும் பரம்பொருளாகிய 'சித்சக்தி'யின் குணங்களில் ஒன்றான ஹிலாதினியால் காக்கப்படு

வார்கள். பல்வேறு வழிகளில் அவர்கள் எல்லாம் நித்ய தொண்டர்களாக ஒப்புக் கொள்ளப்பட்டு அழைக்கப்படுவார் கள். மாயையின் தொல்லேகளே அவர்கள் அறியமாட்டார் கள். கர்ம சக்கரம் அல்லது மாயையின் விளேவிஞல் சுற்றிச் சுற்றி வருகின்ற செயலும், முடிவும் பற்றிய துன்பங்களே அறியமாட்டார்கள்.

இவ்வுலக இன்பத்தை விரும்புகின்றவர்கள் மாயையின் மற்ருெரு பகுதியிஞல் ஈர்க்கப்படுவர். மறுபடியும் அவர்கள் தெய்வீகத் தொண்டர்களாக மாறுகின்றபொழுது மாயை யின் கர்மசக்கரத்திலிருந்து விடுபடுபவர்.இத்தகையஆத்மாக் கள் மாயையின் பிடியிலிருந்து விடுபடுதலோ அல்லது அவற்றிற்கு அடிமைப்படுதலோ எல்லாம் தெய்வத்தைப் பொறுத்தது. ஹரி மாயா சக்திக்கும் தலேவன். மாயாசக்தி தலேவன் விருப்பப்படியே தலேவனுக்குத் தொண்டு செய் கிறது. ஆத்மா அல்லது ஜீவன், தெய்வத்தினிடமுள்ள 'ஹிலாதினி' சக்தியால் உதவி செய்யப்படாதபொழுது மாயையின் சக்திக்கு வயப்படக் கூடிய நிலேயில் அமைக்கப் பட்டுள்ளது. அதஞல் இயற்கையாகவே கடவுளுக்கும் ஜீவனிற்கும் (ஆத்மா) ஓர் வேற்றுமை இருக்கிறது. இதை எந்த சக்தியும் அழிக்க முடியாது. (அதாவது எல்லாம் கடவுளின் பரிஞமம் என்கிற தத்துவம் இந்தப் பேதத்தை மாற்ற முடியாது). இந்த ஜீவர்கள் எப்போது தோற்றுவிக் கப்பட்டார்க்ள்? எப்பொழுது வயப்படுத்தப்பட்டார்கள்? என்பன போன்ற வழிமாற்றம் செய்கின்ற கேள்விகள் கேட்பதை நிறுத்துங்கள். தெய்வீக வரலாற்றில் 'மாயை யின் காலவரலாறு என்ற ஒன்று இல்லே. ஏனென்ருல் ஜீவர்கள் பொருள்களிஞல் வயப்படுத்தப்பட்ட பிறகே மாயையின் ஆதிக்கம் தொடங்குகிறது. அதஞல் நீங்கள் மாயையின் காலக்கிரரமத்தை இதுபோன்ற விஷயங்களில் பொருத்த முடியாது.

# 5

சிலவகை ஆத்மாக்கள் பிரகிருதி அல்லது மாயாசக்தியி ஞல் பூர்ணமாக கவரப்பட்டுவிடுகின்றனர். பிரகிருதி, கடவு ளின்மாயை, பிரதானம், பிரபஞ்சம், அவித்யை என்கிற பல பெயர்கள் ஒரே கொள்கையின் பல்வேறு நிலைகளில், பல் வேறு குணங்களுக்காக அளிக்கப்பட்டவையே.

பரம்பொருளின் ஸ்வரூப - சக்தியிலிருந்து வேருன சுதந் திரமான சக்தி அல்ல மாயாசக்தி. கடவுளுக்குத் தொண்டு செய்யாத, நன்றி மறந்து, வேறுபட்டு விளங்குகிற 'ஜீவர்களை (நல்வழிப்படுத்த) தெய்வத்தின் கட்டளைகளை ஏற்றுப் பணி புரிகின்ற வெளியே தோன்றுகின்ற சக்திதான் மாயாசக்தி. உண்மையாகக் கூறப்போனுல் ஜீவன்களுக்கு மறுவாழ் வளிக்க கடவுளின் இல்லத்தில் பொறுப்பேற்ற சக்திதான் மாயாசக்தி.

தங்களைத் தெய்வத்தின் தொண்டர்கள் என்பதனை மறந்து, தெய்வத்தின் சுதந்திரமான சிந்தனையைத் தூற்றி தங்கட்குத் தாங்களே (அதிகாரி என நினைத்து) இன்பத்தினை அனுபவித்துக் கொண்டிருக்கிற ஜீவர்கள், மாயையின் வசத் தில் அகப்பட்டுக் கொள்வார்க்ள். அவர்கள் குற்றேவல் செய் யும் தன்மையுடைவர்களாகவும், திருத்தப் படவேண்டிய நிலையில் உள்ளவர்களாகவும் இருக்கின்ற தன்மையில் மாயைக்கு ஆட்பட்டவர்களாவர். சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய 3 குணங்களை மாயை கொண்டுள்ளது. நன்றியில்லாத ஆத்மாக்களைப் பிணைக்கின்ற சங்கிலிகளாக அம்மூன்று குணங் களும் உள்ளன. மாயை, ஜீவாத்மாக்களிடம் இருவேறு நிலை களைப் பிரயோகிக்கிறது. லிங்கம், ஸ்தூலம் என்ற இரு சொற்களால் அந்த இருவேறு நிலைகள் விவரிக்கப்படு கின்றன.

மாயை, இருபத்து நான்கு பொருள்களாக (மூலங்கள்) உலகில் நிலைத்து இருக்கின்றது. ஐந்து மூலங்கள்:-

1. நிலம் 2. நீர் 3. நெருப்பு 4. காற்று 5. ஆகாயம். ஐந்து குணங்கள்:- ஒலி, ஒளி, பார்வை, சுவை, நாற்றம். பத்து இந்திரியங்கள்:- ஐந்து புலன்கள்:- கண், காது, மூக்கு, நாக்கு, தொடு புலன் அவற்றுடன் செயல்படும் அவயங்கள் கை, கால் முதலியவைகள். மேலே சொல்லப்பட்ட இருபதும் (20) ஸ்தூலம் என்ற வெளிப்புறம் காணப் படுபவை. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் அதாவது எண்ணம், உணர்ந்து கொள்தல், கவனித்தல், நான் என்ற தவறான மனப்பாபாக்குடைய புத்தி ஆகியவை லிங்கதோஷம் அல்லது உள் மனதைப் பற்றியவை, பிறகு ஆத்ம வடிவை மூடிவிட்டு வீழ்ந்து பட்ட ஜீவனிடம் மாயை தன் வேலையை ஆரம்பிக்கின்றது.

மாயையின் வேலை கர்மா, அகர்மா, விகரமா என்ற 3 பிரிவாக காணப்படுகிறது. கர்மா என்பது ஸ்மிருதிகளின்படி வர்ணாசிரம தர்மத்தில் கூறிய புண்ணியம் அல்லது தர்மம் என்பதை அடையப் பாடுபடும் கார்யங்கள். அகர்மா என்பது கடமை செய்வதினின்றும் தவறுதல். விகர்மா என்பது பாவம் அல்லது குற்றம் புரிதல் மூலம் நரகம் போகச் செய்தலான காரியம். கர்மா ஒருவனை பிரம்மலோகம் வரை உயர்த்திச் செல்ல உதவுகிறது.

அகர்மா இவ்வுலகில் மகிழ்ச்சியற்ற நிலையில் வாழச் செய்கிறது. விகர்மா நரகத்திற்குத் துரத்துகிறது. வீழ்ந்து விட்ட ஆத்மா லிங்கதேஹத்துடனேயே ஒரு உடலிலிருந்து மற்றொரு உடலிற்குப் பயணம் செய்து கர்ம, விகரமங்களைச்

செய்து மேலுலகத்திற்கு சென்று புண்ணியம் தீர்ந்துவிட்ட உடன் நரகலோகத்திற்குச் சென்று நன்மைகளையும் தீமைகளையும் மாறி மாறி அனுபவிக்கிறது.

இவ்வாறு வீழ்ந்துபட்ட ஆத்மாவின் நிலையை நோக்கும் பொழுது, இறுதியாக பலதரப்படும் நிலையில் காணப்படுகிறது. அங்கே சிலசமயம் அரசர் போல மகிழ்ந்து வாழ்ந்தும் சிலசமயம் வறியோராக அழுது தீர்த்தும் தங்கள் வாழ்க்கையைக் கழிக்க வேண்டியவர்களாக உள்ளனர். அதனால் இவ்வுலகம் சிலசமயம் சிறைச்சாலை போலவும், மறுவாழ்வுக்காக திருத்திவிடுகின்ற வீடு போலவும் உள்ளதேயொழிய, சில மக்கள் நினைப்பதுபோல் இன்பம் மட்டுமே அனுபவிப்பதற்குரிய இடமாகக் காணப்படவில்லை.

## ௬

சில ஆத்மாக்கள் பிரகிருதியின் பிடியிலிருந்து விடுவிக்கப்பட்டன. ஜீவர்கள் மாயையின் பாதையிலே சென்றுகொண்டு மனதால் நினைக்க முடியாத வகையில் இன்பத்தையும் துன்பத்தையும் அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர். இந்த இன்பமற்ற துன்பமான நிலையிலிருந்து எவ்வாறு விடுபடுவது? தர்மமோ; கடமையைச் செய்தலோ; யோகநிலையோ ஸ்தூலம்-லிங்கம் ஆகிய சக்தியை வளர்த்துக் கொள்வதோ;. ஸாங்க்யமோ; பொருள்களைப் பற்றிய உண்மைப் பிரிவுகளை உணர்தலோ தான் ஒரு தெய்வாம்சம் பொருந்தியவன் என்கிற நினைப்போ, வைராக்யமோ அதாவது உலக இன்பங்களையெல்லாம் துறத்தலோ நாம் அடைய வேண்டுவதைப் பெற உரிய வழி அல்ல; எப்பொழுது ஒரு மனிதன் வைணவனோடு தொடர்பு கொள்கிறானோ; எப்

பொழுது ஒரு மனிதனது இதயம் ஹரி பக்தரஸம் கேட்டு உருகுகிறதோ; அப்பொழுது இருந்தே கிருஷ்ண பக்தியைத் தொடர்ந்து படித்தும், அவருடைய புனிதமான அழகிய பாதங்களைப் பற்றி இனிமையான கிருஷ்ண-பக்தியை உட்கொள்ளுவதற்குரிய அன்பையும் பெற ஏதுவாகிறது. கொஞ்சம் கொஞ்சமாக அவன் மாயையின் தளைகளை நீக்கி விட்டு, இறுதியாக அவனுடைய் இயற்கையான தன்மையை அடைகிறன்.

ஆத்மாவின் இறுதியான கொள்கையாக விளங்குகின்ற கலப்படமில்லாத இனிமையான ரஸத்தை அனுபவிக்கிறன். ஸத் சங்கம் அல்லது சாதுக்களின் தொடர்பு தான் மனிதனின் இறுதியாக அடைய வேண்டிய நிலையை அடைவதற்குரிய வழி.

பக்தி என்பது பொருள்களினூடே பாயும் மின்சாரம் அல்லது கவர்ச்சிக்கின்ற காந்தம் போன்ற தன்மை உடையது. அது பொருத்தமுள்ள ஒரு ஆத்மாவிடமிருந்து மற்றொரு ஆத்மாவிற்கு தொடர்புகொள்கிறது. பக்திக் கொள்கை மிகவும் உண்மையானது. வாழ்வின் ஒவ்வொரு கூறுபாட்டிலும் தெய்வத்தினையே சார்ந்திருப்பது; கடமையைச் செய்வது பக்திக் கொள்கையின் ஒரு கூறுபாடு அல்ல; பெற்ற நன்மைக்காகத் திருப்பிச் செய்கின்ற நன்றிக் கடப்பாடு ஆகும்.

ஆகவே இயற்கையாகத் தோன்றுகின்ற அன்பிற்கு மாறுபாடான விளங்குகிறது. நீதியுள்ள உலகில் தர்மம் பற்றிய கொள்கை, அதனுடைய வழியில் நன்மையானதாகத் தோன்றினும், வெகு அரிதாகவே தெய்வீக முக்கியத்துவத்தை இறுதியில் தரக்கூடும்.

1) கடவுளின்மீது முழு நம்பிக்கை வைத்தல் 2) கடவுளுக்கு, சதாகாலமும், தன்னலமில்லாத சேவையைச் செய்ய விரும்புதல் 3) இன்பத்தின் மீது பற்று காட்டுகின்ற மற்றைய எண்ணங்கள் மீது தொடர்ந்து வெறுப்பு வைத்தல் ஆகிய மூன்று கொள்கைகளும் சேர்ந்து அமைந்ததே சிரத்தை அதாவது பக்தியின் மீது உண்மையான ஆவல் காட்டுதலாகும்.

பக்தி இயற்கையாகவே மற்றதை தொடர்ந்தல்ல அதாவது தனிப்பட்டதாகும். அப்படியானுல் திடீரென எப்படி நமக்கு பக்தி உண்டாகும்? ஸுக்ருதி அல்லது நல்ல பணி முக்கிய உந்து சக்தியாக அமையும் நல்ல பணி (காரியம்) இரு வகுப்புகளாக (பிரிவு) உள்ளது. தர்மத்தை அதிகப் படுத்துகின்ற நல்லவை, நேர்மையானவை முதலியவற்றை அடுத்தவர்க்குச் சொல்வது, செய்வது ஆகியவை ஒருவகை. தெய்வீகப் பண்பை அளிக்கச் செய்கின்ற நல்ல பணிகளைச் செய்வது மற்ரொரு வகுப்பாகும்.

இரண்டாவதாகச் சொல்லப்பட்ட வகை அதாவது ஸுக்ருதி உண்மையான வைணவர்களைக் கொண்டு வந்து தந்து தொடர்பு ஏற்படுத்தும். அம்மனிதரிடமிருந்து சிரத்தை (நன்முயற்சி) தோன்றும் அல்லது உணர்ச்சி பூர்வமான நம்பிக்கை ஏற்படும். உண்மையான குரு என்று சொல்லப்படுகின்ற புனிதமான வைணவரிடமிருந்து ஏற்றுக் கொள்ளத் தக்க பக்தி என்ற அக்கொள்கையின் ஒரு பளிச்சிடும் மின்னல் போன்ற உணர்வு தோன்றும்.

## 7

ஆத்மீகமானதும் அசேதனமானதுமான எல்லா தத்துவங்களும் பரம்பொருளான ஸ்ரீ ஹரியின் அசிந்த்ய-பேதா-பேதா கொள்கையை ஒட்டி ஏற்பட்டவையே. நுண்பொருள்

கோட்பாட்டியல் ஆராய்ச்சியெல்லாம் உபயோகமில்லாதவையே. வேதங்கள்கூட சில சமயங்களில் ஜீவர்கள் கடவிவுனின்று வேருனவர் என்று உரைக்கின்றன. வேறு சில சமயங்களில் ஜீவர்களும் கடவுளும் ஒன்று என்று உறுதிப்படுத்த முயல்கின்றன. உண்மையில் வேதங்கள் எப்பொழுதும் உண்மையையே கூறி வந்திருக்கின்றன.

ஜீவர்கள் கடவுளிடமிருந்து வேருனதாகவும், ஒன்றுபட்டும் ஒரே சமயத்தில் உள்ளனர். இதைப் பகுத்தறிவாளர்கள் நன்கு உணரவில்லை. அதனுல் மனித நிலேகட்கு அப்பாற்பட்ட செயல்களில் கடவுள் தன் சக்தியைப் பயன்படுத்துகின்றபொழுது ஜீவர்களினின்றும், உலகத்தினின்றும் வேருனவராகக் காட்சி தருகின்ருர் மறுபடியும் மனித நிலேயில் உலகியலோடு தொடர்புகொள்கின்றபொழுது ஒன்ருனவராகக் காட்சி தருகின்ருர். வேதாந்தம் நமக்கு 'சக்தி பரிணும் வத (மாற்றம்) த்தினைப் பற்றிச் சொல்லித் தருகிறதேயொழிய ஸ்ரீ சங்கரரின தப்பான "விவர்த்த வாத" த்தினைப் பற்றிச் சொல்லவில்லை, ஸ்ரீ சங்கரருடைய போதனைகள் பல வழிகளில் விளக்கப்படுகின்றன.சிலர், இந்த உலகமும் ஜீவர்களும் கடவுளிடமிருத்துஉண்டானவை என்று சொல்கின்றனர். வேறுசிலர், ஜீவர்களும்உலகமும் கடவுளின் விஸ்தரிப்புகள் (வெளிக்கிளம்பினவை) என்று சொல்கின்றனர். ஸ்ரீ சங்கரர் விளக்கம் செய்கையில் பிரம்ம பரிணமத்தை நீக்கிவிட்டு வியாசர் பரப்ரம்மம் உலகத்தை சிருஷ்டிக்க விவாதித்தவாதத்தை போதிக்கிருர் என்கிருர்.

அதாவது கடவுள் எந்தவித மாறுதலேயும் அடையவில்லை. அதற்கு மாருக கடவுளின் ஒரு பகுதியை மாயை (ஆகாயத்தை மூடி மறைக்கின்ற மட்பாண்டத்தைப் போல) மூடி உலகத்தைப் படைக்கிறது அல்லது அவித்யையில் கடவுள் பிரிதி பலிப்பது போல தோன்றுகிறது. உண்மையில் கடவுள் தவிர வேறு எதுவும் தோற்றம் அளிக்கவில்லை.

ஆனால் இவையெல்லாம் பயனற்ற, தெளிவற்ற விவாதங்களாகும். வேதாந்தம் நமக்குக் கடவுள் மாறுதளற்றவர் என்றும் மாறுதலுக்கு

1. பரிணமவாதம்- பால் தயிராக மாறுதல்; தயிர்-மோராதல்-மாற்றம் பழைய நிலைக்கு வந்து.

2. விவர்த வாதம்- ஜலம் பனிக்கட்டியாகவும்-கெட்டி நெய்- திரவமாகவும் மாறல் இதில் பழைய நிலை திரும்ப முடியும். உட்படாதவர் என்று போதிப்பது தெளிவாகத் தருகிறது.

அவரது சக்திதான் மாற்றங்களினால் (பரிணம வளர்ச்சி) ஜீவர்களையும், அசேதனமான இந்த உலகையும் படைக்க முடியும். உதாரணமாக இரளவாதக் காரன் எவ்வாறு கல்லானது மாறுதலற்று இருக்கும் பொழுது அதிலிருந்து தங்கத்தைச் செய்து காட்டுகின்றானோ அதைப் போன்றது இதுவும் என்று தெளிவாகக் கூறலாம். இவ்வாறு சித்-சக்தி தன்னுடைய அழியாத தெய்வீக வளத்தோடு கூடிய எல்லா குணங்களுடன் சித்-ஜகத் என்ற வடிவம் கொள்கிறது, ஜீவ சக்தி எண்ணற்ற ஜீவர்களாக வடிவம் கொள்கிறது. சிலர் வைகுந்தத்தில் பார்ஷதர் அதாவதுதே தவதைகள் என்றும் தங்குகின்றனர். மற்றும் பலர் பல்வேறு சூழ்நிலைகளில், பல்வேறு வடிவங்களையும், அமைப்புகளையும் கொண்டு இந்த உலகில் உலவித் திரிகின்றனர், வீழ்ந்துபட்ட ஆத்மாக்கள் வாழ்வதற்காகவும், இன்பம் அனுபவிப்பதற்காகவும் மாயா சக்தி பல்வேறு உலகங்களைப் படைக்கிறது.

விவர்த்த வாதம் ஐயமறப் பிழையானதும் வேதம் அளிக்கின்ற போதனைகட்கு மாறுபட்டதுமாகும். ''சக்தி-பரிணமவாதம்'' ஒன்றே உண்மையானது. அது ஆத்மீகங்காதலே நித்யமானது என்பதை ஆதரிக்கிறது; உறுதிப்படுத்துகின்றது. விவார்த்தவாதம் உண்மையானால், ''தெய்வீக அன்பு தற்காலிகமானது'' என்பதைத்தான் கூறுவ்தாகக் கொள்ளவேண்டும்.

# 8

தெய்வீக இருப்பினை அடைவதற்குரிய இறுதியான ஒரே வழி பக்தி ஒன்றுதான். கர்மாவைச் செய்தல் அதன் நிலையில் நேராகவோ உடனடியாகவோ தெய்வீகப் பண்புகளை உண்டாக்க முடியாது. அது அவ்வாறு செய்யுமானால் பக்தியின் மூலமாகத்தான் செய்ய முடியும். எனவே, பக்தி சுதந்தரமானது; கர்மா மார்கமும் ஞானமார்கமும் சுதந்தரமல்லாத தன்மைகள்.

மனிதன் தெய்வீகத்தன்மை உடையவனாதலால், ஞானம் இறுதியான உறுதிப் பொருளான கடவுளைக் கொண்டு வர இயலாது. அப்படி ஞானமோ, கர்மாவோ தெய்வீகத்தைக் கொண்டு வருமானால் அது பக்தியின் துணை கொண்டுதான் முடியும். தெய்வீகத்தை அடைய அதனால் பக்தி ஒன்றுதான் வழி. கண்ணபிரான்பால் நட்போடு கூடிய உணர்வு கொள்வதுதான் பக்தி. எந்தவித ஆசைகளும் அற்று நட்பு உணர்வை வளர்க்கும் ஆசைதான் முக்கியமாகக் கொள்ளவேண்டும். இதில் கர்மா, ஞானங்கள் போன்றவையெல்லாம் கலக்கக்கூடாது. பக்தி என்பதே உணர்வாகவும் செயலாகவும் உள்ளது என்பதை நாம் கண்டிருக்கிறோம்.

பக்தி மூன்று நிலைகளில் உள்ளது 1. சாதன பக்தி, 2. பாவ பக்தி 3. பிரேம பக்தி. சாதனபக்தி உணர்வுகள் தோன்றாத நிலையில் உள்ள பண்பாடு என்ற அளவில் நிற்பது. பாவபக்தியில் உணர்வுகள் தோன்றுவதற்கு ஆரம்பிக்கின்றன. பிரேம பக்தியில் உணர்வுகள் செயல்படுகின்றன. பக்தி என்பது தெய்வீகத் தன்மையுடைய அன்பின்பால் எழுகின்ற தெய்வீக உணர்வு.

சாதனபக்தி என்பது இரண்டு வகைப்படும். வைத சாதன பக்தி என்பது ஒன்று. ராகானுக சாதன பக்தி என்பது மற்றொன்று. ''வைதம்'' என்பது விதி அல்லது கட்டளை என்ற சொல்லிலிருந்து தோன்றியது. சாஸ்திரத்தின் கட்டளையிலிருந்து எங்கு பக்தி எழுப்பப்படுகிறதோ (தோற்றுவிக்கப்படுகிறதோ) அங்கு உணர்வுகள் தோன்றுதவரையில் ''வைத பக்தி'' செயலாற்றுகிறது.

கண்ணபிரான் மீது இயற்கையாக ஒருவருக்கு அன்பு தோன்றினால் அங்கு ராகம் என்று சொல்லப்படுகின்ற கருத்து தோன்றுகிறது. இறைவனுக்கு தொண்டு செய்ய வேண்டுமென்ற மேலான விருப்பம்தான் 'ராக'ம் எனப்படுவது. ஒருவர் இந்த அழகான வழியில் செல்ல வேண்டுமென விருப்பப்பட்டுவிட்டால், கண்ணபிரானைப்பற்றிய உணர்வுகளைத் தன் மனதில் வளர்த்துக்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டு விடும். இதுதான் ராகானுக சாதன பக்தி. பின்னால் கூறப்பட்டுள்ள சாதனை வைதிக சாதனையை விட வலிமையானது.

கண்ணன் பால் நட்புணர்வோடு கூடிய பக்தியை ஒன்பது வகைகளில் வளர்த்துக்கொள்ளலாம்.

1) கண்ணனது தெய்வீக நாமம், வடிவு, குணங்கள், லீலை ஆகியவைகளைக் கேட்டல்.
2) அவைகளைப்பற்றி பேசுதலும், பாடுதலும்.
3) அவைகளைப் பரிந்து பேசுதலும் தியானம் செய்தலும்.
4) புனித திருப்பாதங்களுக்குத் தொண்டு செய்தல்.
5) ஆராதித்தல்.
6) தலை வணங்குதல்.
7) அவருக்குத் திருப்தி தருகின்றவற்றை எல்லாம் செய்தல்.

8) நட்பு கொள்தல்.

9) பொறுமையாயிருத்தல் (உலக இயக்கத்தை விட்டு விலகி இருத்தல்).

மேலே கூறியவற்றுள் கீர்த்தனே அல்லது கண்ணன் பெயரைப் பாடுதல் என்பது மிக உயர்ந்தததாகும். எளிய நிலையில் ஞானத்தோடு ஆராதித்தல் அவசியமானது. பய னற்ற விவாதங்களை நீக்கிவிடவேண்டும். சிலர் ஸ்ரீ மூர்த் தியை ஆராதிக்க ஆரம்பிக்கின்றனர். ஸ்ரீ மூர்த்தி கலைஞர் களாய் அமைக்கப்பட்டு பீல்ளிபப் (சாத்தான்) போன்றவ ரால் அறிமுகப்படுத்தப்பட்டது. அப்படிப்பட்ட பொருளை ஆராதித்தல் கடவுளின்பால் வேறுபாட்டை உண்டாக்கும். அது கடவுளின் எல்லாம் அறிந்த தன்மைக்கும், எங்கும் நிறைந்துள்ள தன்மைக்கும், எல்லையற்ற சக்திக்கும் வரை யறையாக அமைந்துவிடும்.

சகோதரர்களே! விளுக்களை சந்தேக மறத் தெளிவாக உணர்ந்து கொள்ளுங்கள். உங்களை நீங்கள் மதச்சர்ச்சை பற்றிய கொள்கைகளுக்கு ஆட்படுத்திக்கொள்ளாதீர், அவை உங்களைத் 'தவருன வழிகாட்ட அனுமதிக்காதீர். தனக்கு இரண்டாவது என ஒன்று இல்லாலததால், கடவுள் பொருமைப்படுபவர் அல்லர்.

சாத்தான் கற்பனையான பொருள் அல்லது உருவகத் தின் கருப்பொருள் தவிர ஒன்றுமில்லை. உருவகமாக்கப் பட்ட அல்லது கற்பனையால் உண்டாக்கப்பட்ட பொருள்கள் பக்திக்குத் தடையாக விளங்கக் கூடாது; உண்மை நிலையில் இயற்கை, சட்டம், விதி முதலிவைகட்கு இறைவன் அப் பாற்பட்டு விளங்கியவராக இருந்த போதிலும் கடவுளைப்பற் றிய நம்பிக்கை உடையவர்கள், இயற்கையான குணங்கள், சக்தி முதலியவற்றை இறைவனுக்குக் கற்பித்து வணங்கு கின்றனர். அவருடைய புனித விருப்பங்களே சட்டங்கள். அவற்றை ஒரு வரம்பில் அடக்குதல் இயலாதது. அவரு

டைய எல்லையில்லாத மேன்மையை விளக்க சர்வ சக்தி உடையவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் அறிந்தவர் என்று கூறுகின்றோம். உண்டாக்கப்பட்ட பொருள்கள் கால தேச வர்த்தமானங்கட்கு உட்பட்டவை. அவருடைய மாட்சிமை மாறுபட்ட குணங்களிம் சக்திகளும் சர்வ வல்லமை பொருந்தியவற்றினுலேயே ஆளப்படுதலில் அடங்கியுள்ளது.

எங்கும் நிறைந்திருக்கின்றவர்; எல்லாம் வல்லவர்; எல்லாம் அறிந்தவர் என்ற 3 தன்மைகளைப் போன்றவற்றில் அடக்கிவிட்டாலும், அதனைப்போல் வேறு எங்கும் காண இயலாது. இறைவனுடன் புனிதமான நிறைவான ஆளுமைத் தன்மை தெய்வீக உலகில் சாஸ்வதமாக நிலவுகிறது. ஆனால், அதே சமயத்தில் அவரால் உண்டாக்கப்பட்ட பொருள்களிலும் இடங்களிலும் அதே முழுத் தன்மை காணப்படுகிறது. இந்த கொள்கை தெய்வீகத்தைப் பற்றிய மற்ற கொள்கைகளைவிட மேன்மையானது. மஹாபிரபு உருவ வழிபாட்டை நிராகரிக்கிருர். ஆனுல், தெய்வீகப் பண்பாட்டினை அடைய காணப்படுகின்ற ஒரேவழி எனபதில் ஸ்ரீ மூர்த்தி வழிபாட்டை ஒத்துக்கொள்கிருர். அதில் கடவுள் அழகுக்கு எல்லாம் அழகாக விளங்குகிருர் என்றும், தனித் தன்மையை உடையவர் என்றும் விளக்குகிருர்.

வியாஸர் போன்ற முனிவர்கள் அழகு என்பது அந்தந்த ஆத்மாவின் கண்களுக்கு ஏற்ப (மாறுபட்டோ, உடன் பட்டோ) காணப்படுகிறது என்று கருதுகின்றர். அவர்கள் விரிவான விளக்கவே விட்டுச் சென்றுள்ளனர். வார்த்தைகள் பொருள்களின் மேலெழுந்தவாரியான தன்மையை விளக்குகின்றன. ஆனலும், அவ்விளக்கங்களின் மூலமாக உண்மையைக் காணலாம். அவ்விளக்கங்களின்படி ஒருவர் ஸ்ரீ மூர்த்தியை விவரிக்க இயலும் அதில் நம்முடைய இதயத்தில் இருக்கின்ற உயரிய கடவுளை குதூகலத்தோடு அனுபவிக்கலாம். சகோதரர்களே! அது தவருனதா? அல்லது பாவகரமானதா? கடவுளுக்கு தெய்வத்தன்மையுடனே உயிரற்ற

பொருளாகவோ உருவம் கிடையாது என்று சொல்கின்ற வர்கள் கூட மறுபடியும் இறைவனை வணங்க உண்மைக்குப் புறம்பான வடிவத்தினைக் கற்பனை செய்து கொள் கின்றனர்.

எனவே அவர்கள்தான் உருவ வழிபாட்டுடையவர் களாக மாறிவிடுகின்றனர். ஆனால் தங்கள் மனக் கண்ணின் முன் தெய்வீக வடிவத்தினைப் பார்ப்பவர்கள், அவற்றைத் தங்கள் மனத்திற்கு உகந்தவழியில் கொண்டு செல்பவர் கள், தங்களின் அசேதன உலகிற்காக தங்களுடைய மேன் மையான உணர்வுகள் தொடர்ந்து இருப்பதற்காக ஒரு அடையாளமாக வைத்துக் கொண்டு இருப்பதனைக் கொண்டு அவர்கள் உருவ வழிபாட்டினைச் சேர்ந்தவர்கள் என்று கூற இயலாது.

ஸ்ரீ மூர்த்தியைப் பார்ப்பவர்கள் வடிவத்தினைப் பார்ப்ப தில்லை அதில் தெய்வீக உருவத்தின் தன்மையை பார்ப்ப தால் அவர்கள் உண்மையான ஆஸ்திகர்கள் ஆவர். உருவத் தினை வழிபடுபவர்களும் ஸ்ரீ மூர்த்தியை வழிபடுபவர்களும் வெவ்வேறு விதமான தன்மையை உடையவர்கள். ஆனால் என்னுடைய சகோதரர்களே! அவசரத்தினால் நீங்கள் ஒன்றோடொன்றினை மிக எளிமையாகக் குழப்பிக் கொள் கிறீர்கள். உங்களுக்கு ஒரு உண்மையைச் சொல்கிறேன். ஸ்ரீ மூர்த்தி வழிபாடு ஒன்றுதான் உண்மையான தெய்வத் தின் வழிபாடு ஆகும். வழிபாடு இல்லாமல் உங்களுடைய தெய்வீக உணர்வுகளை வளர்த்துக் கொள்ள இயலாது.

உலகம் உங்களைப் புலன்கள் மூலம் ஈர்த்துக் கொள் கிறது. நீங்கள் கடவுளை உங்கள் புலன்கள் மூலம் பார்க்க இயலாவிட்டால், உங்களைத் தெய்வீக நிலையில் உயர்த்திக் கொள்ள இயலாத நிலையில், நீங்கள் இழிவான நிலையில் வாழ்வீரர்கள்; உங்கள் வீட்டில் ஸ்ரீ மூர்த்தியை வைத்து வழிபடுங்கள். பரம்பொருள்தான் உங்கள் வீட்டைக் காப்ப

வர் என்று உறுதிகொள்ளுங்கள். நீங்கள் உட்கொள்கின்ற உணவு அவரது பிரசாதம் எனக் கருதுங்கள், மலரும் நறுமணப் பொருள்களும் அவரது பிரசாதங்கள் எனக் கருதுங்கள்.

கண், காது, மூக்கு, வாய், தொடுபுலன்கள் முதலியவை தெய்வீகப் பண்பாடுகளைக் கொண்டுள்ளன. நீங்கள் உங்கள் புனிதமான இதயத்துடன் செயலாற்றுங்கள். உங்களது உண்மையான தன்மையைக் கடவுள் அறிந்து, உங்களைப் பற்றி நல்ல முடிவு கொள்ளுவார். சாத்தானும் பிசாசும் இந்த விஷயங்களில் உங்களை ஒன்றும் செய்ய இயலாது. எல்லாவிதமான வழிபாடுகளும் ஸ்ரீ மூர்த்திக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டவை. சமயத்தின் வரலாறுகளை உற்று நோக்கிப் பாருங்கள். நீங்கள் இந்த உயர்ந்த உண்மையை உணர்வதற்கு அறிய வாய்ப்பு ஏற்படும்.

குலக்கடவுள் பற்றி கிறிஸ்துவிற்கு முன் ஏற்பட்ட யூத மதத்திலும், கிறிஸ்துவிற்குப் பின் ஏற்பட்ட கிறிஸ்துவ மதத்திலும் இஸ்லாத்திலும் இருக்கப்பட்ட கொள்கைகள் ஸ்ரீ மூர்த்தி வழிபாட்டில் உள்ள அபிப்ராயத்தின் பாகமாகும். கிரேக்கர்களிடையே உள்ள முடி மன்னர்க்குரிய கடவுளான ஜூபிடரும், ஆரியர்களிடையே உள்ள கர்ம காண்டத்திலுள்ள (வேதத்தில்) இந்திர வணக்கம் ஸ்ரீ மூர்த்தி கொள்கையினையை சற்று தூரத்தே நின்று நிலவுகின்ற கொள்கைகள்தான். சக்திக் கொள்கையும், தியானம் செய்பவர்கள் எண்ணிப் பார்க்கின்ற 'ஜோதிர் மய பிரம்மம்' என்ற கொள்கையும், சாக்தர்களின் உருவமற்ற சக்திக் கொள்கையும் ஸ்ரீ மூர்த்திக் கொள்கையினை மிக லேசான தன்மையாகும்.

உண்மை என்னவென்றால் ஸ்ரீ மூர்த்தி தத்துவம் என்பது உண்மையானது. அது பல்வேறு நிலைகளில், பல்வேறு எண்ணங்களின் வாயிலாக பல முறைகளில் தோற்றம்

அளிக்கிறது. படைக்கும் கடவுளைப் பற்றி நம்பிக்கை இல்லாத ஜைமினியும், காம்டேயும் கூட ஸ்ரீ மூர்த்தியில் தத்துவத்தில் சில சாயல்களை ஒப்புக்கொண்டுள்ளனர். ஏனென்றால் அவர்களின் மனத்தினுள் ஏற்பட்டமனவெழுச்சி அவர்களை அவ்வாறு நினைக்கத் தூண்டிவிட்டது. ஏன் நாம் சிலுவை, சாலிக்கிராமம் லிங்கம் போன்றவைகளில் உள் ளார்ந்த மனதில் தோன்றுகின்றவைகட்கு எடுத்துக்காட்டு கின்ற தன்மை உள்ளதைக் காண்கிறோம்.

மேலும் தெய்வீகக் கருணை, அன்பு, நீதி ஆகியவற்றை எழுதுகோலினாலும் உளியின் செதுக்கதலினாலும் எடுத்துக் காட்ட முடியுமானால், ஏன் தெய்வத்தின் பல கோணங்களில் உள்ள குணங்களில் அழகைச் செய்யுள்களினாலும் ஓவிய மாகவும் சிற்பங்களாகவும் ஜனங்களின் நன்மைக்காக எடுத்துக்காட்டக் கூடாது? வார்த்தைகள் எண்ணங் களாகச் செயல்பட முடியுமானால், கடிகாரம் நேரத்தைக் காட்ட முடியுமானால், பாடல்கள் வரலாற்றைச் சொல்ல முடியுமானால், படங்களும், உருவங்களும் சீரிய எண்ணங்களு டன் உணர்வுகளுடைய தொடர்பு கொண்டு மானசீகமாக உணர்கின்ற அழகையும் பரம்பொருளின் அபரிகிருதமான அழகையும் ஏன் காட்ட முடியாது?

ஸ்ரீ மூர்த்தி வழிபாடு செய்பவர்கள், உருவ வழியாகவும் கருத்து வழியாகவும் வழிபாடு செய்பவர்கள் என்று இரு வகைப்படுவர். உருவ வழிபாடு செய்பவர்கள் மனதிற்கு ஏற் பவும் சூழ்நிலைக்கு ஒப்பவும் ஆகிய நிலைகளில் கோவில் களைக் கட்டி வழிபட்டு தகுதிபெற்றவர்களாவர். மனத்தள வில் கருத்து நிலையில் வழிபடுபவர்கள் கீர்த்தனைகளைக் கேட் டல் பாடுதல் ஆகிய வழிகளில் வழிபடுவர். அவர்களுக்கு கோவில்கள் பற்றி மதிப்பு உண்டென்றும் யாவரும் பங்கு கொள்ளும் பொதுத் தலமாக அமைந்தபடி சாதி, நிறங்கட்கு அப்பாட்பட்டவர்களாக அவர்கள் விளங்குகிறார்கள்.

மஹாபிரபு பின்னல் கூறப்பட்ட வழிபாட்டினையே பெரி தும் விரும்பி ஆதரித்து, தனது சிக்ஷாஷ்டகம் என்ற நூலில்

வழிபடும் முறையையும் விளக்கி உள்ளார். துறவு மனப்பான்மையோடு கூடிய இடைவெளியில்லாத வழிபாடு மிகவிரைவில் கடவுளின் பிரேமபாசத்திற்கு ஆளாகிவிடும்.

## 9

பிரேமை என்பது தெய்வீக உலகில் கடவுளிடம் இறுதியாகி நிலவுகின்ற ஒரு பொருள். கர்ம மார்க்கத்தைப் போற்றுவோர் இவ்வுலகில் உள்ள சிறு இன்பத்தை அனுபவிப்பதும், மேல் உலகில் (தேவலோகத்தில்) பேரின்பத்தை அனுபவிப்பதும்தான் மனிதனுக்குத் தேவையானது என்கின்றனர்.

கர்மம் அல்லது செயல் இருவகைப்படும். அதாவது உலகியல் (இன்பம்) பொருள்களைப் பெறுவதற்காகச் செய்யப்படும் கர்மாக்கள் ஒருவகை. இவைகளைத் திருப்திப்படுத்துவதற்காகச் செய்யப்படுகின்ற கர்மாக்கள் மற்றொரு வகை. கர்ம மார்க்கத்தை ஆதரிப்பவர் தாங்கள் இன்பம் பெறவேண்டியே இருவ்கையான கர்மாக்களையும் செய்கின்றனர். இன்பத்தைப் பெறுவதற்காகவே சாதாரணமாகக் கடவுள் வணங்கப்படுகின்றார்.

இங்குதான் பக்திக்கும் கர்மாவிற்கும் எல்லைக்கோடு காணப்படுகிறது, வரையப்படுகிறது. பிரீதி அல்லது ப்ரேம பக்தி என்ற நிலையை அடைய பக்தி முயற்சி செய்கிறது. எல்லா செயல்களும் அதுதான் முடிவான விளைவாக இருக்க வேண்டும். ஆனால், கர்மா தன்னலத்தோடு கூடிய இன்பத்தைப் பெற முயற்சி செய்கிறது. ஞான மார்க்கிகள் முக்தி அல்லது உயர்ந்த தெய்வீக ஞானத்தைப்பெற "ஞான"த்தின் வழியாக முயற்சி செய்கின்றனர்.

முக்தியை இரு வகையாக விவரிக்கின்றனர். ஒருவகையில் ஆத்மா இறைவனோடு இரண்டறக் கலந்து விடுகிறது.

ஆன்மா கடவுளினின்று தனித்த நிலையில் விளங்குவதை நிர்மூலமாக்கிவிடுதல். மற்றொருவகையான முக்தியில், ஆத்மா இறைவனின்றும் சாஸ்வதமாக புறத்தே நிற்கின்றது.

முக்தி வருகின்றபொழுது ஆத்மா, சாலோக்கிய நிலை பெற்று சித்ஜகத்தினை அடைகிறது. அதாவது சித் உலகத்தில் வீடு பேறுபெறுகிறது. ''சமீப்ப'' நிலையில் தெய்வத்தின் வெகு அருகே தன் இருப்பிடத்தைப் பெறுகிறது.சாருப்பிய நிலையில் கடவுளைப் போன்ற உருவத்தை தானே அமைந்து விடுகிறது. ஸார்ஷ்டி அல்லது கடவுளைப் போன்ற சக்தியினைத் தான் அடைந்து விடுதல் ஆகியவைகளை அடைகிறது.

பின்னால் சொல்லப்படுகின்ற வகுப்பினை உடைய முக்தி, இறைவனை மனமுவந்து கொடுப்பதாகும். அதற்குப் பிறகு, முக்தி அடைந்த பின்னர் நாம் இறைவனுக்கு ப்ரீதியுடன் அல்லது தூய அன்புடன் தொண்டு செய்கிறோம். முதல் வகையான முக்தி, தகுதியில்லாதது என பக்தர்களால் நிராகரிக்கப்படுகிறது. ஏனெனில் அது மிக உயர்ந்த கொள்கையான அன்பினை அழித்து விடுகிறது. இரண்டாவது வகையான முக்தியினை மிக உயர்ந்ததாக கொள்ள இயலாது, மேலும் அஃது ஆத்மாவிற்கு இடையான தன்மையாக உள்ளது. பிரீதி தான் இறுதியானதாக இருக்க வேண்டும். ஆகவே முக்தியை நம்முடைய தெய்வீக சிம்மாசனத்தில் ஏற்றுவதற்குரிய இடையேயான பலனாக கருதவேண்டும்.

அதற்குப் பிறகும் முக்தியை ஆசைப்படுகின்றவர்கள் பக்தியை வளர்ப்பதற்குப் பதிலாக வேறொன்றில் ஆசைப்படுதலால் தெய்வீகப் பண்பை வளர்க்கும் நிலை கெட்டு விடுகிறது.அதில்சுயநலத்தின் சாயை படர்ந்திருப்பதால் தன்னலமில்லாத தூய பக்தியோடு தொடர்பு இல்லாததாகப் போகிறது.அதனால் எப்பொழுதும் போராடும் இரண்டு கொள்கை

களுக்கு இடையே சுதந்திரமான பக்தியை வளர்ப்பதற்கு முயல வேண்டும். அவைகள் முறையே பக்தியின் மீது சுய நலம் கலந்து விருப்பமும் முக்தி அடைய விருப்பமுமாகும். நாம் எப்பொழுதும் கண்ணனையே அவரிஷ்டம்போல முக்தி அளிக்கவோ அல்லது அளிக்காமலிருக்கவோ நம்ப வேண்டும். நாம் பக்தி என்ற சமய உணர்வை தொடர்ந்து வளர்ப்பதற்கு வழிபடவேண்டும். பிரீதி அல்லது தூய அன்புதான் நல்வாழ்க்கையில் அடைய வேண்டிய இறுதியான, தீர்ப்பான பொருளாகும்.

விவரித்தபடி ரதி, (இன்பம்) கண்ணபிரானது தூய தெய்வீக அன்பினது ஒரு பகுதியாகும். உற்சாகத்துடன் சேருகின்றபொழுது அது பிரீதியாக மாறுகின்றது. பிரீதி கண்ணபிரான்மீது தனிப்பட்டதான அன்பாக உள்ளது. கண்ணனையும் அவரோடு தொடர்பு கொண்டுள்ளவற்றையும் தவிர மற்றுள்ள பொருள்கள், மனிதர்கள் மீது வெறுப்பையும் பிரீதி செய்து விடுகிறது.

கண்ணன் எனது கண்ணன் (தெய்வம்) என்ற உணர்வோடு பிரீதி சேர்கின்றபொழுது கண்ணன்மீது பிரேமை உண்டாகிறது. இங்குதான், கண்ணன் என்னுடைய மேலாளன் (தலைவன்); நான் அவனுடைய வேலையாள் (தொண்டன்) என்ற எண்ணம் துவங்குகிறது. இத்துடன் பிரேமையைச் சேர்த்தால் 'பிரணயம்' சேர்க்கை என்பதாகிறது. இங்கு கண்ணனுடன் கூடிய நட்பின் உறவு வளர ஆரம்பிக்கிறது. பிராணயத்தில் மரியாதை காட்டுதல் முதலியவை தளர்ந்துவிடுகின்றன. பிராணயத்தில் கண்ணன் எனக்கே முற்றிலும் சொந்தம் என்றும் எனது விருப்பமான அன்புக்குரிய பொருளானவர் கண்ணன் என்ற எண்ணமும் மனதை ஆச்சரியமாக மாற்றுகிறது. கண்ணன் தன்னுடைய பெருந்தன்மை சக்தி ஆகியவற்றை அடக்கி வைத்து எளிமையைக் காட்டுகிறுன். இருதயத்தின் அபரிமிதமான உருகுதலைப் பிரேமையோடுசேர்க்கின்றபொழுது அதுசினேகமாக மாறிவிடுகின்றது.

இங்கு கண்ணனுக்கும், கண்ணனை வழிபடுபவர்களுக்கும் பெற்றோரும் மகனுமாக ஆகின்ற உறவு வருகிறது. இந்த நிலையில் கண்ணனை எண்ணி ஏங்குதலும் தொடர்பு கொள்ளுதலில் ஆற்றாமையும், கண்ணன்மீது கொள்கின்ற பற்றினை போதித்தலும் இயற்கையாக நிகழக் கூடியவை. சிநேகத்துடன் விருப்பத்தினைச் சேர்க்கின்றபொழுது ராகம் உண்டாகிறது. இந்நிலையில் சிறிதளவு பிரிவுகூட தாங்க முடியாததாக உள்ளது. இங்குதான் கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள உறவு போல கண்ணனுக்கும் அவனை வழிபடுவோர்க்கும் உள்ள உறவு ஆரம்பிக்கிறது. ஒருவரோடுஒருவர் பார்க்காததால் உண்டாகும் துன்பமே மகிழ்ச்சியாகும். ராகம் தனது வஸ்துவைத் திரும்பிப் பார்க்கும்போது நினைக்க வைக்கின்றது. 'ராகம்'தானே புதியதாக இருப்பதால் ஒவ்வொரு விநாடியும் 'அனுராக'மாக மாறுகிறது.

இந்த நிலையில் பரஸ்பர பணிவும், காதலனைத் தொடர்ந்து பின்பற்றிச் செல்ல வேண்டும் என்ற உணர்வும் எல்லா இடங்களிலும் காணப்படுகின்ற முக்கியமான சாயலாக உள்ளது. ''அனுராக''ம் ஆச்சரியப்படத்தக்க அளவில் வளர்ந்துகொண்டே சென்று ''பைத்தியமாக'' முற்றி உயர்ந்த தன்மையின் நிலைக்கு மாறுகின்ற அளவு குவிந்துள்ளது. அது விவரிக்க முடியாததொன்று. ''ரதி'' நிலையிலிருந்து ''மஹா பாவ'' நிலைவரை உள்ள எல்லா கருத்துக்களும் ''ஸ்தாயி பாவம்'' என்று நாம் அழைக்கின்ற தன்மையில் அடங்கும். ''விபாவம்'' அனுபவம், சாத்வீக, சஞ்சாரி ஸ்தாயி பாவங்கள் எல்லாம் சேர்ந்து கிருஷ்ண-பிரேம ரஸமாக அதாவது நிரந்தர பரவச நிலையை அடைவிக்கின்றன.

மாயையின் அடிமைத்தளத்தில் சிக்குண்ட மனித வாழ்க்கையில் இந்த உயர்ந்த ரஸம் (பாவம்) தாறுமாறான வடிவங்களை மனதில் உண்டாக்குகிறது. வாழ்க்கையே

மாயையால் தெய்வீக வாழ்க்கையின் தாறுமாருன பிரதி பலிப்பேயாகும். ஆன்மா தனியாக நேர்மையான பொருளான தெயவீகத் தலைவனை கண்ணபிரானுடன் தொடர்பு கொள்கின்ற பொழுது ரஸம் தூய்மையாகின்றது. மனமும் புலன்களும் தவருன பொருள்களோடு தொடர்பு கொண்டு செயல் படுகின்ற பொழுது ரஸம் தரக்குறைவு அடைவதோடு வெறுக்கத்தக்க தாகவும் மாறிவிடுகிறது. மனிதனுக்கு உயர்ந்த தெய்வீக பாவத்தைப் பற்றிய கருத்துக்கள் சம்பந்தப்பட்ட அறிவினை, நெறிதவறச் செய்கின்ற ரஸங்கள் (பாவம்) வழிகாட்டும் குறிப்புகளாக விளங்குகின்றன. அது பற்றிய இந்த வாத விவாதங்களும், விளக்கங்களும், நேராக நெறி தவறச் செல்கின்ற ரஸங்களுடன் சம்பந்தப் படுத்தப்பட்ட சொற்களைக் கொண்டு விளக்கப் படுகின்றன. நமது வாசகர்களை, ஆன்மீகத்திற்கும் அசேதனத்திற்கும் உள்ள மாறுபாடுகளை தெளிவாக உணர்ந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன். இல்லாவிட்டால் அவர்கள் அதலபாதாளத்தில் விழ நேரிடும்.

கண்ணனுடைய குணங்கள், வடிவம் பெயர், லீலைகள் முதலியவற்றை பாகவதத்தில் கூறியபடி தூய இதயத்துடனும் திட மனத்துடனும் ஆன்மீகத்தை அடைந்த சாதுக்களின் கூட்டத்தில் படிக்கும்போது பக்தியின் இயல்புகளை உணர முடியும். எவன் ஒருவன் எல்லாவற்றையும் நுணுகி ஆராய்ந்து பார்க்கின்ருனே, அவன் பொருள்களில் காணப்படுகின்ற உண்மையை அறிய இயலாது. ஏனெனில் பொருள்களின் காரணத்தை இன்றைய நிலையில் கடவுளின் நியதிப்படி உணர முயல்கின்றவன் தெய்வீக சூழ்நிலையை அடையவே இயலாது.

மேலும் அப்பொருளைப் பற்றிய ஆராய்ச்சி நமக்குத் தேவையில்லை. நாம் கூறியபடி அதனை மேலும் மேலும் ஆராய விரும்புகிறவர்கள், சமயம் கிடைக்கின்ற பொழுது இதய பூர்வமாக ஆராய்ச்சி செய்யட்டும். அழகே உருவான

ஆண்டவன் தெய்வீகத்தைப் பற்றி அறிய உதவி செய்து மேலும் மேலும் உயர அருள் பாலிப்பர்.

மனமானது மாயைக்குள் அகப்பட்டு குழம்புகிற வகையில் பொருள்களுடனும் அதனோடு கூடிய. தொடர்பையும் விட்டு நீங்கி உயர் நிலை அடைவதற்கு வழியில்லை. மேலை தத்துவ ஞானிகள் மனம், அஹங்காரம் ஆகியவற்றை ஆத்மா அல்லது தெய்வம் என ஒன்றுக்கிச் சொல்கின்ற தவறுகளைச் செய்துவிடுகின்றனர். நாம் அதற்கு வருந்துகிறோம்.

மனிதனுடைய இந்நிலைகளை மொத்தமாகத் திரட்டிச் சொல்லப் போனுல் அதில் 3 வித கொள்கைகள் அடங்கியுள்ளதைக் காணலாம்.

1. ஸ்தூலம்- உடல் சம்பந்தமான பொருள்கள்

2. லிங்கம்- மனம், கவனம், பகுத்தறிவு, அகங்காரம் இந்நிலை மாயையுடன் கூடிய தொடர்பினுல் ஏற்படுவது அல்லது ஆத்மாவுடன் கூடிய தொடர்பு ஏற்படுகின்ற பொழுது இன்பம் பெற வேண்டும் என்ற நிலையில் கடவுளின் சேவகன் என்ற நிலை மறத்தலால் தவருகக் கணித்தல்.

3. மாயையுடனும் அதனோடு கூடிய தொடர்பினின்றும் மனிதன் தனித்துச் செயல்படுதல். தற்பொழுது ஏற்படுகின்ற இந்த சிறு துன்பத்தினின்று விடுபடுவதற்கு தூய பக்தனிடமிருந்து உண்மையான பக்தியை அறிந்து ஏற்றுக் கொள்ளுதலேயாகும். பக்தி, மனிதனை அழகின் வடிவமாக விளங்குகிற கண்ணனோடு சேர்ப்பதற்கு உயர்த்துவதற்கு— ஒரு வழிகாட்டியாக உள்ளது. மறுபடியும் இறுதியில் கிருஷ்ண பிரேமையால் நிலைபெற உதவுகிறது.

மாயை சூழ்ந்த உலகத்தில் வாழ்கின்ற மனிதன், தெய்வீக உணர்வை வளர்க்க வேண்டி அமைதியாக வாழ்தல் வேண்டும். இந்த சமூகத்தில் மனிதன் பாவங்களை நீக்கி, தூய வாழ்வு வாழ்தல் வேண்டும். கூடிய வரையில் சகோ

தர மனிதர்களுக்கு நன்மையைச் செய்ய வேண்டும். தனக்குத் தானே துன்பங்களையெல்லாம் வீரஉணர்வுடன் தாங்கிக் கொண்டு எளிமையாக வாழ்தல் வேண்டும். தன்னிடமுள்ள நன்மைகளையோ, பெருமைகளையோ பெரிதுபடுத்திப் பேசக் கூடாது. ஒவ்வொருவருக்கும் அவரவர்க்குரிய மரியாதையை அளிக்க வேண்டும். அமைதியானதும் சீலமுடையதுமான வாழ்க்கை வாழ்வதற்கும் கண்ணபிரானது தொண்டர்களை உற்பத்தி செய்வதற்குமாக திருமணம் செய்து கொள்ள வேண்டும். தெய்வீகப் பண்பாட்டினை வளர்ப்பது வாழ்க்லகயின் முக்கிய நோக்கமாக அமைதல் வேண்டும். அத்தகைய பண்பினை வளர்ப்பதற்குரிய செயல்களைச் செய்தல் வேண்டும். தெய்வீகப் பண்பினை வளர்ப்பதற்கு மாருக உள்ளவைகளிடமிருந்து நீங்க வேண்டும். கண்ணபிரான் ஒருவரே நம்மைக் காப்பாற்ற முடியும்; மற்ற எவராலும் முடியாது என்பதில் திடமான நம்பிக்கை கொள்க. கண்ணபிரான் ஒருவரே உன் பாதுகாவலர் என்பதை ஏற்றுக் கொள்க. கண்ணபிரான் நீ எதைச் செய்ய வேண்டுமென்று விரும்புவார் என அறிகின்ருயோ அதையே நீ செய். கண்ணபிரான் விருப்பமில்லாமல் சுதந்திரமாக நீ எதையும் செய்வதாக எண்ணுதே; செய்வன எல்லாவற்றையும் பணிவுடன் செய்க. இந்த உலகம் தற்காலிக உறைவிடம் என நினைவில் வைத்து நீ உன்னுடைய சொந்த வீட்குற்குச் செல்ல எப்பொழுதும் தயாராக இரு. உன் கடமையைச் செய், வாழ்க்கையின் இறுதி நிலையான கிருஷ்ண-பிரீதியை அடைய பக்தியை ஒரு வழியாகக் கொண்டு, வளர்ச்சி பெறுக. காயம், மனம், ஆத்மா யாவற்றையும் தெய்வத்தின் சேவையில் ஈடுபடுத்து. உன் செயல்களில் எல்லாம் பரம்பொருளை வழிபடு.

இவ்வாறு, தமிழ் வாசர்களாகிய உங்கள் முன் மஹாபிரபுவின் வரலாற்றையும் போதனைகளையும் வைத்துள்ளோம். உங்கட்கு மேலும் பல செய்திகளை தேவைப்படு

மாஞல், அவற்றையும் வெகு விரைவில் தமிழில் தர முயற்சி செய்கிருேம்.

நமது பெருமைக்குரிய வாசக நண்பர்கள் ஸ்ரீ சைதன்ய மஹா பிரபுவின் கொள்கை ஒரே ஒரு கடவுள் வழிபாட்டினை போதனை செய்து வந்தாரென்றும் உருவ வழிபாட்டினை விரும்பவில்லை என்றும் அறிந்திருப்பர். அவர் ஸ்ரீ மூர்த்தி வழிபாட்டிற்கும், உருவ வழிபாட்டிற்கும் உள்ள வேறுபாட்டினை நயமாகக் காட்டிஞர் என்று எடுத்துக் காட்டிஞேம். உருவங்களை வழிபடுதல் என்பது உருவங்களையும் உருவமுடையவர்களையும் வணங்குதல். உருவமுடையவர்கள் கடவுளர் இல்லை. காசி வாழ் துறவிகள் மஹா பிரபுவை, பரம்பொருளே என்று அழைத்த போது, ஜீவர்களைக் கடவுள் என்று அழைப்பது மிகப் பெரிய பாவம் என்று அவர்களிடம் கூறிஞர். பல தடவைகளில் மறுபடியும் மறுபடியும் கடவுளின் உண்மையான வடிவத்தைத் தவிர, (மனிதனை தன் வடிவில்தான் படைத்தான்) ஏனைய வடிவங்களை வணங்குதலைக் கண்டித்தார். கடவுளுக்குப் பதிலாக உபயோகப்படுத்தும் வடிவங்களை தனக்கென அடுத்து ஒன்று இல்லாத தெய்வத்தின் பிரதியாகத் தான் கருதவேண்டும். பரம்பொருளுக்குப் போட்டியாக வேறு ஒன்று இல்லை என்பது மஹா பிரபுவின் சமயக் கொள்கை.

மஹாபிரபு உலகிற்கு எதைப் போதித்தாரோ அதையே தன் வாழ்க்கையிலும் வாழ்ந்து காட்டிஞர். தெய்வீக முன்னேற்றம் ஏற்பட தூய உண்மையான நியதியுள்ள வாழ்க்கையை வாழ்ந்து காட்டிஞர். நேர்மை பக்தியின் பெருமையை உயர்த்தும் என்பது ஒரு உயர்ந்த தன்மை. தன்னைக் கிருஷ்ண பக்தர் என்பவருடைய வாழ்க்கையில் அத்தகைய உயர்ந்த ஒழுக்கம் காணப்படவில்லையாஞல் அவருடைய உண்மைத் தன்மையை நலம் சந்தேகிக்க வேண்டியிருக்கும்.

நான்கு வகையான கருத்துக்கள் உலகில் நிலவுகின்றன 1) நாத்திகம் (கடவுள் நம்பிக்கை இன்மை) 2) எல்லாம் தெய்வாம்சம் என்கிற கொள்கை 3) அக்கறையில்லாதவர் 4) கடவுள் நம்பிக்கையுடையவன் (ஆஸ்திகன). ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு முதல் மூன்றையும் சமயத்திற்கு(மதம்) மாறுபட்டவை என ஒதுக்கி வருகின்றார். அவர் தூய ஆஸ்திகத்தையே போதித்து, மற்ற மூன்றையும் விலக்குமாறு உபதேசம் புரிகிறார்.

ரிஷிகளால் ஆரம்பித்து வைக்கப்பட்ட ஜாதி உட்பட்ட வர்ணாசிரம தர்மங்கள் சமுதாயத்தில் வாழ்கின்ற மனிதர்களுக்கு நன்மை உண்டாக்குவதற்கான ஆரம்பிக்கப்பட்டவை என உபதேசம் செய்கிறார். தெய்வீக இயக்கத்தின் முன்னேற்றத்தினை அவை எதிர்க்காத வரையில் அவை பூஜ்யர்களுக்கு உரித்தாக இருக்கட்டும். மிகத் தீவிர அந்தணராக வாழ்ந்த ப்ரத்யூமன மிஸ்ராவை, தெய்வீகப் பண்பினை உணர ராமானந்த ராயிடம் அனுப்பியது கிருஷ்ண தத்துவத்தை உணர்ந்தவர் எந்த வருணத்தவராக (ஆத்ரர், பிராமணர், சந்நியாசி) இருந்தாலும் குருவாக இருக்கத் தகுதியுடையவர் என்பதைக் காட்டுவதற்காகவே ஆகும். தெய்விகத் தத்துவத்தைப் பெரியதாக்கி உணர்வதில் பெறுகின்ற இன்பத்தினை அடைய மனிதர்கள் சம உரிமை உடையவர்கள் என்பதை உபதேசம் செய்தார். உலகச் சகோதரத்துவத்தில் எல்லா மனிதர்கட்கும் சம உரிமையும், விசேஷ சகோதரத்துவத்தை வைணவர்கட்கும் - மஹா பிரபுவைப் பொறுத்த வரையில் வைணவர்கள் தெய்யீக தத்துவத்தைப் பரப்புவதில் முன்னோடியாக விளங்குகிறவர்கள் தருகிறார். மனித சிந்தனைகளில் பிரிவினைப் படுத்துகின்ற எவற்றையும் நாம் அனுமதிக்கக் கூடாது என அறிவுறை கூறுகிறார். மேலும் அவர் நாம் சம்பாதிக்கும் செல்வங்கள் யாவும் நேரிய வழியிலும் மேலதிகாரிகள் மற்றையோருடன் உண்மையான முறையிலும் நடந்து சம்பாதிக்கப் பட்டவையாக இருக்க வேண்டுமேயல்லாது தீயவழிகளில் சம்பாதித்ததாக இருத்

தல் கூடாது. ராமானந்தராயின் சகோதரரான கோபினதை பட்ஞயக்கை முறையற்ற வழியில் பொருளீட்டியதற்காக ராஜா தண்டித்த பொழுது ஸ்ரீ சைதன்ய மஹா பிரபு தமது பரிசாகர்களை உலக விஷயங்களில் நேர்மையான வழியில் நடந்து கொள்ள வேண்டுமென எச்சரித்தார்.

தன் வாழ்நாளில் ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு, குடும்ப வாழ்வில் ஈடுபட்டுள்ளவர் (கிரஹஸ்தர்) தேவைப்படுவோர்க்கும், உதவியற்றவர்க்கும் எல்லாவித உதவிகளையும் செய்ய வேண்டும் என்று தானே கடைப்பிடித்துக் காட்டினர். யாரிடம் கல்வி அளிக்கும் வல்லமை இருக்கின்றதோ, அவர்கள் மற்ற யாவருக்கும் கல்வியைக் கற்றுத் தரவேண்டும், குறிப்பாக பிராமணர்களுக்கு-ஞானத்தை விருத்தி செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கின்ற அந்தணர்களுக்கு அவசியம் கல்வியைக் கற்றுத் தரவேண்டும் என்று உபதேசிக்கிறார்.

மஹாபிரபு போதித்த சமயம் உலக மக்கட்குப் பொதுவானவை; யாருக்கும் தனிப்பட்டதல்ல. மிகப் படித்தவர்களும், படிக்காத பாமரர்களும் அவரது உபதேசங்களை ஏற்றுக்கொள்ளத்தக்க நிலையில் உள்ளன. படித்தவர்கள் ஏற்கெனவே விவரிக்கப்பட்ட ''சம்பந்தத் தத்துவம்'' (விஷயத்தை அறிய ஆவலுடன்) என்ற கொள்கையின்படி அவற்றை ஒப்புக்கொள்வார்கள். கல்வியறிவு பெறுதவர்கள் கண்ணபிரானின் திருப்பெயரைக் கூறுகின்ற அளவில் தூய வைணவர்களின் கூட்டத்தில் கலந்துகொண்டு இறையன்பினை அனுபவிப்பர். மனிதர்களிடையே சாதி, இனப் பிரிவு இன்றி மிக உயர்ந்த தெய்வீகத்தை வளர்க்கும் சிறந்த சாதனமாக எதிர்காலத்தில் கீர்த்தனங்கள் விளங்கப்போகின்றன, இப்படித் தொழுபவர்கள் உலகம் முழுவதும் பரவி பிரிந்து கிடக்கும் நிலையங்களையெல்லாம் ஒன்று சேர்த்து கோவில், மசூதி, மாதாக்கோவில் என்று தொழும் இடங்களில் புகமுடியாதவர்கள் என்று இனிமேல் யாவரும் கீர்த்தனர்களால் ஒன்று சேருவார்கள்.

ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு தன் புனித வாழ்க்கையாலும் தத்துவ உபதேசத்தாலும் மக்களுக்கு நன்கு போதித்திருக்கிறார். மஹாபிரபுவின் வாழ்க்கையில் யாரும் எந்த நிலையிலும் குற்றங் குறை கண்டுபிடிக்க முடியாது. மஹாபிரபுவின் துறவுத்தன்மை, இளையவரான ஹரிதாஸிடம் மஹாபிரபு காட்டிய தயையின்மை இப்படி சில விஷயங்கள் கேள்விக்கு இடமாயின சிலருக்கு. ஆனால், அதுபற்றி தனிப்பட்ட முறையில் சிந்தித்தபோது நமது புத்திக்கெட்டியவரை பதில் இதுதான். கட்சி மனப்பான்மையின் பேரில் கிடைத்த அவசர முடிவேயாகும்.

ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு தன்னுடைய தீர்மானங்களை நிறைவேற்றி நடத்துவதில் மிகவும் துணிவு உள்ள வீரர். ஒரு சமயம் பொறுமையுள்ள சில பிராமணர்கள் அவருக்கு எதிராக அரசர் ஒரு படையை அனுப்பியுள்ளார் என்று சொன்னபொழுது, ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு அரசர்தான் (மஹாபிரபு) செய்வது என்ன என்பதைக் கவனிக்க வேண்டும் என்றார். அவர் எல்லோரிடமும் இனிமையாகப் பழகும் தன்மை உடையவர். ஆயினும் தன் கடமையைச் செய்வதில் மிகவும் உறுதியாக இருப்பர். தனது குருவான கேசவ பாரதியின் சமயச் சகோதரரான பிரம்மானந்த பாரதி ஒரு சமயம் புலித்தோலுடன் இவர் முன் தோன்றினர். ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு, அவர் அந்த ஆடையைக் களைந்த தோடல்லாமல் (சாதா துணியில்) 'கௌபீனமும் பஹீர் வாஸமும்' அணிகின்ற வரையில் வணங்கவில்லை. மேலும் அவர் அவரைப் பாரதி இல்லையென்றும் சொனனர். எவ்வாறு தனது குரு ஒரு விலங்கின் தோலை ஆடையாக அணிந்து கொள்ள முடியும். துறவிகள் தங்களுடைய உபயோகத்திற்காக விலங்கினைக் கொல்லுவதை ஆதரிக்கக் கூடாது. ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு அதனை விரும்பவில்லை என்று உணர்ந்த பாரதி, விலங்கு ஆடையைக் களைந்து விட்டு துணி ஆடையை அணிந்து கொண்டார். உடனே

மஹா பிரபு தலை வணங்கி, தனது குருவின் சமய சகோதரர்க்கு அளிக்க வேண்டிய மரியாதையினை அளித்தார்.

ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு சாஸ்திரங்களில் எழுதப்பட்ட சொற்களின் (அலங்காரங்களில்) உழலாமல், அதில் கூறப்பட்டுள்ள கருத்துக்களின் சாராம்சத்தை கடைப்பிடிக்க வேண்டும் என்று தனது தொண்டர்களிடம் கூறிவந்தார். தேவநாத பண்டிட் பாகவதத்தைப் படித்தபொழுது பக்தியின் இயல்பை உணர்ந்து கொள்ளவில்லை. ஆனால் பக்தியின் இயல்பை அவர் உணர்ந்த பொழுது ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு அவரை அன்புடன் கட்டித் தழுவி, தேவானந்த பண்டிட் அதற்கு முன் செய்தவற்றையெல்லாம் (தவறுகள்) மன்னித்து விட்டார்.

ஸ்ரீ சைதன்ய மஹாபிரபு தனது வாழ்நாள் முழுவதும் மகிழ்ச்சியுள்ள மனிதராக வாழ்ந்தார். அவர் கிழக்கு வங்காளப் பகுதியினின்று தோன்றியவரானாலும் சிறு பிள்ளைகள் செய்வது போல் சுட்டித்தனங்கள் செய்து பெரியோர்களுக்கு கோபத்தை ஊட்டினார். புகழ்பெற்ற பண்டிதரான பல்லவ பட்டர் ஒரு சமயம் பாகவதத்துக்கு விளக்கமான உரை ஒன்றைக் கொண்டு வந்து தான் ஸ்ரீதரஸ்வாமிக்கு மதிப்புதரமாட்டேன் என உரைக்கையில் மஹாபிரபு விபசாரி தான் கணவனை மதியாதவளாகமுடியும் என்றார். இப்படிப் பட்டநேரடிப் பேச்சு பண்டிதரைதாக்கியதும் அதுமுதல் பாகவதத்திற்கு விளக்கம் எழுதிய ஸ்ரீதர் சுவாமியைப் பற்றி மரியாதையில்லாத வார்த்தைகளைக் கூறுவதை நிறுத்திக் கொண்டார்.

மஹாபிரபு அவர்களை இனி கணிப்பது வாசக நண்பர்களுடைய திறமை. வைணவர்கள் மஹாபிரபுவை பரம்பொருள் கண்ணனே தான் என ஒப்புக் கொண்டுள்ளனர். சிலர் பக்த அவதாரம் அவர் எண்ணுகின்றனர். சில வைணவ பக்தர்களின் வேண்டுகோளின்படி, வழிபாட்டு வேளையில் நாள்தோறும் பாராயணம் செய்ய சில மங்களப் பாடல்களை நாங்கள் இயற்றியிருக்கிறோம். ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவை மேற்சொன்ன விதமாக தெய்வீகப்பயணத்தில் செல்லமுடியாதவர்கள். உயர்ந்த ஞானியாகவும், தூய ஆசிரியராகவும் ஒப்புக் கொள்ளலாம். உண்மையில் நாங்களும் அப்படியே வாசக நண்பர்கள் எண்ணக் கருதுகிறோம் என எண்ணுகிறோம். வாசக நண்பர்களே! நீங்கள் இந்த

பக்கங்களைப் படித்த பிறகு ஸ்ரீ சைதன்யரை கண்ணனாக எண்ண முடியுமானால் அவரைக் கண்ணனின் அவதாரமாக எண்ணுவீர்கள். ஏனென்றால் சிற்றின்பத்தின் வீழ்ந்துவிட்ட மனிதனைப்போல் சுழன்று வீழ்ந்து கிடக்க வேண்டிய அவசியம் பரம்பொருளாகிய கண்ணனுக்கு இல்லை எனபது எங்கள் நம்பிக்கை பரம்பொருள் தனது மேலான சக்தியினால் புகழ் குணங்கள் எல்லாவற்றோடும் பூவுலகிற்கு மாயையின் (இச் சக்தியின் உலகியில் இன்ப துன்பத்திற்கு காரணம்) உதவி யின்றியே வந்துவிடமுடியும். நாம் வேறுமாதிரியே நினைப் போமானால் மிக உயர்ந்த பரம்பொருளை மிகவும் தாழ்ந்த நிலைக்குக் கொண்டு வந்த பாவத்திற்கு ஆளாவோம்.

அவருடைய அதிசயச் செய்கைகளை நம்பவில்லையானால் அதற்கு எந்த வித மறுப்பும் நாங்கள் தெரிவிக்கவில்லை. ஏனெனில் அதிசயச் செயல்கள் ஆற்றல் மிக்க பரம்பொருளை உணர்த்த இயலாது. இராவணன் போன்ற கொடியவர்கள் கூட பலவித அதிசயச் செயல்களை உண்டாக்கிக் காட்டினார் கள். ஆனால் அவை அவர்களைப் பரம்பொருளாக ஆக்க வில்லை, அளவு கடந்த பிரேமையும், அதன் அளவு கடந்த செல்வாக்கும் கடவுளிடம் மட்டும் காணப்படுமே தவிர மற்ற வேறு எவரிடமும் காணப்படாது.

பெருந்தன்மையுள்ள வாசகர்களே! இதுவரையில் நாங் கள் உங்கள் நேரத்தை எடுத்துக் கொண்டதற்கு எங்களை மன்னிக்கவும். ஸ்ரீ சைதன்யர் மஹாபிரபுவின் தொண்டர் கள் என்ற நிலையில் அவருடைய உயர்ந்த சிறப்பு மிக்க போதனைகளை உங்களிடம் பரப்புவது (பிரசாரம் செய்வது) எங்கள் கடமை. அக் கடமையினை நாங்கள் செய்கின்ற பொழுது நாங்கள் உங்களுக்கு ஏதாவதுதுன்பங்கள் தந்திருப் போமேயானால் நாங்கள் உங்களால் மனனிக்கப்பட வேண் டியவர்கள்.

முடிவாக, நீங்கள் எழுப்புகின்ற எந்த வினாக்கட்கும் நாங்கள் விடை கூறக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதைப் பணிவோடும், மகிழ்ச்சியோடும் தெரிவித்துக் கொள்கிறோம். தெய்வீக அன்பினை வளர்ப்பதற்கு உரிய பெரு முயற்சிகளில் உங்களுக்கு உதவி புரிய நாங்கள் மிகவும் ஆர்வமுடன் இருக் கிறோம் என்பதனைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

—O—